# அரசியலா...?

S வெங்கடராமன்


| | |
|---|---|
| **பக்கங்கள்** | **148** |
| **விலை** | **₹ 100** |
| **முதல் பதிப்பு** | **அக்டோபர் 2023** |



**20 A ராமன் தெரு, சிட்லப்பாக்கம்**

**சென்னை 600 064 -  +91 72002 67480**

# முன்னுரை

இந்தக் கதைகளின் தொகுப்பு சற்று வித்தியாசமானது

“எது நடந்ததோ அது நன்றாகவே நடந்தது,

எது நடக்கிறதோ அது நன்றாகவே நடக்கிறது,

எது நடக்குமோ அது நன்றாகவே நடக்கும்”

என்ற நம்பிக்கையில் வாழும் பாமரனும் இல்லாமல் எது நடந்தால் எனக்கு என்ன? என்று தன் சுகத்தை மட்டும் பார்க்கும் அறிவுஜீவியாகவும் இல்லாமல் நாட்டில் இப்படி எல்லாம் நடக்கிறதே மக்கள் வசதியாக வாழவில்லையே என்ற கவலையுடன் நம்மால் ஒன்றும் செய்யமுடியவில்லையே என்றும் மனதில் ஏக்கத்துடன் வாழும் லட்சக்கணக்கான சராசரி மனிதர்களில் நானும் ஒருவன்.

இந்த எழுத்தாளரும் அதாவது நானும் வித்தியாசமானவன். அடிப்படையாக ஒரு பொறியாளர். ஆனால் எதாவது எழுதவேண்டும் என்ற முயற்சியில் அவ்வப்போது ஈடுபடுவேன். வாழ்வின் அடிமட்டத்திலிருந்து பெரிய போராட்டங்களுக்குப் பின் வாழ்வில் இரண்டாவது இன்னிங்ஸ்ஸில் ஓரளவு வசதியுடன் வாழ்ந்துகொண்டுருப்பவன்.

ஏறக்குறைய 50 ஆண்டுகள் இடைவெளியில் என்னுடைய பலதரப் பட்ட எண்ண ஓட்டங்களிடையே அவ்வப்போது எந்த தொடர்ச்சியும் இன்றி எழுதப் பட்டது. அவற்றில் அரசியல் தொடர்பாக உள்ளவற்றைத் தொகுத்து இங்கு கொடுத்துள்ளேன்.

என்னுயிர்த் தோழன், LKG, கொடி, தூள் போன்ற எத்தனையயோ படங்களும் அரசியல் வாழ்வில் அரங்கேறும் அவலங்களை எடுத்துக்காட்டியும் தமிழ் நாட்டு அரசியலில் எந்த விதத் தாக்கத்தையும் ஏற்படுத்தாது வேதனைக்கும் வருத்தத்துக்கும் உரிய

விஷயம். முதலில் இந்த படங்கள் நமக்கு உண்மை நிலையை உணர்த்த எடுக்கப்பட்டன என்பதை மக்கள் உணரவில்லை. படத்தை எடுத்தவர்களும் அரசியலில் மாற்றம் ஏற்படுத்த வேண்டி எடுக்கவில்லை. அவர்கள் இதை வியாபார நோக்கோடு தான் எடுத்தார்கள் இந்த சப்ஜெக்ட் ABC சென்டரில் கலெக்ஷன் சிறப்பாக இருக்கும் என்ற நம்பிக்கை வைத்தார்கள். அது சரியாகவே இருந்தது. மக்கள் கை தட்டினார்கள். காமெடியாக ரசித்தார்கள். பொழுது போகாதபோது விவாதித்தார்கள். சென்றார்கள். ।

ஆனால் மக்களிடம் ஒரு பெரிய எதிர்மறை கருத்தை உள்மனதில் ஏற்றிவிட்டார்கள். அரசியல்வாதி என்றால் இப்படித்தான் இருக்கவேண்டும் இந்தமாதிரி இல்லையென்றால் அரசியல்வாதியே இல்லை என்ற பொன்னான கருத்து தான்.

பல வருடங்களுக்கு முன்னால் எழுதப்பட்டதால் ஒரு பெரிய நன்மை எனக்கு கிடைத்திருக்கின்றது நான் பல ஆட்சிகளை பார்த்திருக்கிறேன். மிகவும் நேர்மையான அரசியல்வாதிகளையும் பார்த்திருக்கிறேன். ஆனால் காலப்போக்கில் நேர்மையான அரசியல்வாதிகள் காணாமல் போய்விட்டார்கள். இப்போதுள்ள அரசியல் ஜனநாயகம் என்பது மக்களுக்காக என்பதை மொத்தமாக ஓரம் கட்டிவிட்டது. இன்னொன்றும் நீங்கள் படிக்கும்போது ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். அந்த காலகட்டத்தில் இப்பொது உள்ளது போல் செல் போன், இன்டர்நெட், மீடியா எதுவும் இல்லை.

தமிழ் நாட்டு மக்கள் இந்த நடைமுறையை மாற்றமுடியாதது என்று ஏற்றுக் கொண்டு தங்களையும் இந்த நடைமுறைக்கு த் தயார் படுத்திக் கொள்ள முயற்சி செய்யத் தொடங்கி விடுவார்களோ என்ற ஆதங்கத்தில் வெளியிடுகின்றேன்.

இதைப் படித்து ஒரு சிலராவது அரசியலில் முதிர்ச்சி பெருவாராகில் இந்தத் தொகுப்பின் பயனை அடைந்தவனாவேன். இந்த புத்தகத்தை படித்து ஒரு சிலர் கீழே உள்ள என் எதிர்பார்ப்பின்

படி மாறினால் நான் அவர்களுக்கு என் கோடானுகோடி வணக்கத்தையும் நன்றியையும் தெரிவிக்கின்றேன்.

நம்மில் பல விதம் :

1. எனக்கு என்ன? நம்மால் ஒன்றும் செய்யமுடியாது.. இருக்கும் வரைப் போராடிவிட்டு செல்ல வேண்டியதுதான் என்ற எண்ணத்தில் நாளை ஓட்டிக் கொண்டிருப்பவர்கள். இவர்கள் “நான் ஒட்டுப் போட்டு ஒன்றும் ஆகாது” என்று நினைத்து தேர்தல் அன்று லீவு விட்டால் சினிமாவைப் பார்த்து என்ஜாய் பண்ணலாம் என்று ஒட்டுப் போடும் இடத்திற்குப் போகாதவர்கள். இவர்கள் 20 முதல் 25 சதவீதம்..

2. ஏதாவது செய்யவேண்டும்?, என்ன செய்யவேண்டும்?, எப்படிச் செய்யவேண்டும்?, எங்கு எப்போ எப்படி ஆரம்பிக்க வேண்டும்? என்று திகைத்து நிற்பவர்கள்

3. அரசியல் சாக்கடை. அதில் நல்லவர்களுக்கு இடம் இல்லை.. அரசியல் பேச்சில் மட்டும் கலந்துகொண்டு ஓட்டுச்சாவடிக்குத் தானும் போகாமல் அடுத்தவரையும் போகவிடாமல் செய்பவர்கள். இவர்கள் 20 முதல் 25 சதவீதம்.

முதல் பிரிவில் வருபவர்கள் ஓட்டுச்சாவடிக்குச் சென்று வாக்கு அளிக்கவேண்டும். ஒவ்வொரு ஓட்டும் விலை மதிப்பில்லாதவை. அதை போடுவது நமது கடைமை என்று நினைத்து ஒட்டு போடவேண்டும். .

இரண்டாவது பிரிவில் வருபவர்கள் பெரிதாக ஒன்றும் செய்யவேண்டாம்.. நீங்கள் வசிக்கும் தெருவில் உங்கள் நண்பர்களிடம் ஒட்டு போடுவதின் அவசியம் நல்ல வேட்பாளர்களுக்கு வோட்டு போடச் சொல்லவேண்டும். அதை இன்றிலிருந்தே செய்யலாம்.

மூன்றாவது பிரிவில் வருபவர்கள் அரசியல் சாக்கடையாகத்தான் இருக்கிறது. அதற்கு காரணம் நம் போன்ற

நல்லவர்கள் ஒதுங்கியதால்தான் என்று உணரவேண்டும். சாக்கடையானதற்கு நாமெல்லாம் பொறுப்பு எடுத்து நல்லவர்களை தேர்ந்தெடுக்கவேண்டும்.

மொத்தத்தில் ஒரு காலத்தில் அறிவுக்கு புகழ் பெற்று இருந்த தமிழகத்தின் தற்போதய நிலை வேதனைக்குரியதாய் இருக்கிறது. பொது வாழ்வில் தொண்டு சுயநலம் இன்மை அறவே ஒழிந்துக் கொள்ளை அடிக்கும் வியாபாரமாகி விட்டது.

அதிகாரம் ரௌடிகள் கொள்ளைக்காரர்கள் வழிப்பறி செய்பவர். கையில் சேரும். தலைவர்கள் நேர்மை இல்லாதவர்களாகவும் தரம் குறைந்தவர்களாகவும் நம்பிக்கை வைக்க முடியாதவர்களாகவும் இருப்பார்கள் தலைவர்கள் தேன் தடவிய நாக்கு உள்ளவர்களாகவும் அற்ப மனது உடையவர்களாகவும் இருப்பார்கள். அவர்கள் பதவிக்காக அவர்களுக்குள் சண்டை போட்டுக் கொள்வார்கள் அவர்கள் சண்டையினால் இந்தியா வலுவிழக்கும்”

இந்த மேற்கோள் வின்ஸ்டன் சர்ச்சில் இந்தியா சுதந்திரம் வாங்கும்போது சொன்னது

அவர் சொன்னதை இப்போது நினைத்துப் பாருங்கள்।

# வேண்டுகோள்

இதைப் படிக்கும் வாசகர்களுக்கும் மற்ற எல்லோருக்கும் ஒரு பணிவான வேண்டுகோள்.

இது நான் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளபடி எனது 50 ஆண்டுகள் இடைவெளியில் என்னுடைய பலதரப் பட்ட எண்ண ஓட்டங்களிடையே அவ்வப்போது எந்த தொடர்ச்சியும் இன்றி எழுதப் பட்டது. அவற்றில் அரசியல் தொடர்பாக உள்ளவைகளைத் தொடுத்து இங்கு கொடுத்துள்ளேன். இன்றய காலகட்டத்தில் சமூகத்தில் சேவை வெகுவாகக் குறைந்து சுயநலன்கள் அளவுக்கு அதிகமாகப் போய்விட்டது. என்பது எல்லோரையும் மிகுந்த கவலைக் குள்ளாக்கியிருக்கிறது

அதன் ஒரு வெளிப்பாடு தான் இந்த புத்தகம். இதில் யாரையும் குறிப்பிட்டு எழுத வில்லை. யாரையும் காயப்படுத்தவேண்டியும் எழுதவில்லை. இது முழுக்க முழுக்க என்னுடைய சொந்தக் கற்பனை. இருந்த போதிலும் அவ்வப்போது நடந்த சம்பவங்களின் தாக்குதல் கற்பனையின் ஓட்டத்தை பாதித்து இருக்கலாம் இதில் ஏதாவது யாரையாவது வருத்தப்பட வைக்கக் காரணமாக இருந்தால் இதன் மூலம் மன்னிப்புக் கோறுகிறேன். யாரையும் திருத்துவதற்கு எனக்கு திறமையோ பக்குவமோ அனுபவமோ அறிவோ கிடையாது. இதில் வேதனையின் வீச்சு வெளிப்படவேண்டும் என்ற தெளிவு மட்டும் உண்டு.

சமீபத்தில் ஒன்று படித்தேன்.

ஒரு அதிகாரியிடம் ஒரு கையெழுத்து வாங்க ஒருவர் சென்றாராம். கையெழுத்துப் போட்டுவிட்டு “நீங்கள் போகலாம்” என்றாராம்.

கையெழுத்து வாங்கியவர் வெளியில் வந்து நின்றுகொண்டிருந்த பியூனிடம்

“என்னப்பா இவர் எதுவும் கேட்கவில்லை. இவர் கையெழுத்து செல்லுமா?” என்று கேட்டாராம்.

அதாவது காசு கொடுக்காமல் கையெழுத்து போடும் அதிகாரிகள் நாட்டிலேயே இல்லை என்ற எண்ணம் மக்கள் அடிமனதில் நன்றாக வேர் ஊன்றி உள்ளது..

ஓட்டு போடாமல் வீட்டில் உட்கார்ந்து டி.வி பார்க்கும் நமக்கும், படிக்காத பாமர மக்களுக்குப் புரியவைத்து சரியான வேட்பாளர்களை தேர்ந்தெடுக்காத படித்த எல்லோருக்கும் பெரிய அளவில் பங்கு உண்டு என்பதை இப்போதாவது உணர்வோம்..

குற்றத்தை தெரிந்தும் கண்டுகொள்ளமல் அமைதியாக இருந்தாலும் சட்டப்படி குற்றம் தான் என்றும் உணர்வோம்.

இதற்கு நாம் தான் முழுக்க முழுக்கக் காரணம். என்பதை முதலில் உணரவேண்டும். நாட்டின் மீது அக்கறையற்ற தன்மை, நம் சமுகத்தின் மீது அக்கறையற்ற தன்மை. நான் மட்டும் பாடுபட்டால் என்ன ஆகிவிடப்போகிறது என்ற தட்டிக்கழிக்கும் மனப் பான்மை. தனி மனிதன் திருந்தினால் சமூகம் திருந்தும் என்ற மறக்கப்பட்ட உண்மை. நாட்டில் நடப்பதைப் பார்த்து விரக்தி போன்றவைகளை சில காரணங்களாகச் சொல்லலாம். “அரசியல்வாதிகளால் அதிகாரிகள் ஊழல் செயகிறார்களா? இல்லை அதிகாரிகளால் அரசியல்வாதிகள் ஊழல் செயகிறார்களா?” என்பது பட்டிமன்றத்தில் விவாதிக்க வேண்டிய தலைப்பு..

மக்கள் நல் வழிப்படுத்த வேண்டியப் பொறுப்பில் உள்ள அரசாங்கம் நாள் முழுதும் மக்களுக்கு பொழுது போக்கு உடனுக்குடன் செய்திகள் என்ற போர்வையில் தொலைக்காட்சிகளை எண்ணற்ற சேனல்களை 24 மணி நேரமும் அனுமதித்து இருக்கிறது. இதன் மூலம் ஒரு கலாச்சார சீரழிவையும், சிந்திக்க மறுத்து சோம்பேறியாய் இருக்க

விரும்பும் இளைஞர்களையும் உருவாக்கிக் கொண்டிருக்கிறது என்பதை எல்லோரும் மறந்து போல் நடிக்கிறார்கள்.

வயதானவர்கள் நோயால் பாதிக்கப்பட்டிருப்ப வர்கள் என்ன செய்வார்கள்? செய்திகளை எப்படி மக்களிடம் சேர்ப்பது போன்ற வாதங்கள் வைக்கப்படும்.

செய்திகள் அறிவு பூர்வமாக இல்லாமல் இங்கே கொலை அங்கே பாலியல் பலாத்காரம் என்று தினமும் அறிவித்து குற்றச்செயல் புரிவர்களுக்கு தான் மட்டும் தனியாக இல்லை தானும் மற்ற எவ்வளவோ பேர் செய்வதை தான் செய்கிறோம் என்று நியாயப்படுத்தும் போக்குக்கு உதவும் .

வயதானவர்களுக்கும், நோய்வாய்ப் பட்டவர்களுக்கும் ரேடியோ, 'CD' என எவ்வளவோ சாதனங்கள் உள்ளன. அவர்கள் பேரை சொல்லி மொத்த சமூகத்தையும் கெடுத்துக் கொண்டிருப்பது தனி மனித வாழ்க்கைக்கும் நாட்டுக்கும் கேடு.

எந்தவித நல்ல சமூகச் சிந்தனையும் இன்றி அடியாட்களையும் ரௌடிகளையும் கதாநாயகன்களாகக் காட்டிக்கொண்டிருக்கும் சினிமா தொடர்ந்து பார்த்துக் கொண்டு மக்கள் மாக்களாக மாறிக் கொண்டிருப்பது சமூக சிந்தனையாளர்களுக்குப் பெரிய வருத்தத்தையும் மனச் சோர்வையையும் அளித்துக்கொண்டிருக்கிறது.

என் ஒரு ஓட்டு என்ன செய்துவிடும்? அதனால் ஒட்டு போடவில்லை. யார் போய் வரிசையில் அவ்வளவு நேரம் நிற்பது? எதிலும் சுயநலம் தான் மிகுந்து காணப்படுகிறது.

இந்த நிலை மாற ஒரு சிறு முயற்சி தான். இந்த புத்தகம் நாட்டில் உள்ள யதார்த்தங்களை மக்களுக்கு புரியும் வகையில் சற்று சுவை கூட்டி அளித்திருக்கிறேன்.

இதைப் படித்து ஒரு சிலராவது அரசியலில் முதிர்ச்சி பெருவாராகில் இந்த தொகுப்பின் பயனை அடைந்தவனாவேன்.

இன்னமும் நமக்கு என்ன என்று இருந்தால் ஜனநாயகத்திற்கு அதை விட பெரிய துரோகம் இருக்கமுடியாது. நமக்கு சுதந்திரம் கிடைக்க நமது முன்னோர்கள் செய்த தியாயகங்களை நினைவு கூறுங்கள். படித்தவர்கள் நாட்டின் நலனில் அக்கறை உள்ளவர்கள் தாங்கள் ஓட்டு போடுவதை ஒரு கடமையாக எடுத்துக்கொண்டு குறைந்தது இரண்டு பேர்களுக்காவது ஜனநாயகம் பற்றி சொல்லி அவர்கள் ஓட்டு போடுவதின் அவசியத்தையும் அதிலும் சரியான நேர்மையான ஊழலற்ற வேட்பாளருக்கு ஓட்டு போடுவதின் அவசியத்தையம் சொல்லவேண்டும் என்று உறுதி எடுத்துக்கொண்டு செயல்படுத்துங்க இதை படிக்கும் வாசகர்களுக்கும் மற்ற எல்லோருக்கும் இது பொதுவான வேண்டுகோள்

இந்த புத்தகத்தை எல்லோருக்கும் கருத்து சுதந்திரம் இந்த நாட்டில் உண்டு என்ற எண்ணத்தில் வெளியிடுகின்றேன். அது தவறு என்று நினைப்பவர்களும், இந்த புத்தகத்தில் சில இல்லை பல இல்லை ஒட்டு மொத்த புத்தகமோ யாரையாவது காயப்படுத்தினால் தயவு செய்து என்னை தொடர்பு கொள்ளுங்கள் நானே நீங்கள் குறிப்பிடும் பகுதியை நீக்கிவிடுகிறேன். தயவு செய்து நீதித்துறையை நாடாதீர்கள் அவர்களுக்கு இது போன்று நிறைய வழக்குகள் நிலுவையில் உள்ளன. அவர்களின் சுமையை நாமும் கூட்டவேண்டாம்.

முக்கியமாக இதில் வழக்காடுவதற்க்காக வேண்டிய நேரமும் நிதி வசதியும் என்னிடம் இல்லை.

.

## உள்ளடக்கம்

# அரசியலில் குதிப்பது எப்படி?

(ஒரு விளக்க கையேடு)

ஜெயலலிதா அடுத்து கருணாநிதி மறைவுக்குப்பின் தமிழகத்தில் ஒரு பெரிய வெற்றிடம் அரசியலில் ஏற்பட்டிருப்பதை எல்லோரும் ஏற்றுக் கொள்கின்றனர். அந்த வெற்றிடத்தை நிறப்பி அரசியலில் சேவை செய்ய ஒவ்வொரு தமிழ்க்குடிமகனுக்கும் பொறுப்பும் கடைமையும் உண்டு.

கலைச் சேவை செய்து மக்கள் பணத்தில் சொகுசாக வாழ்ந்தவர்களுக்கு சமீபத்தில் மேற்படி சேவையில் கூடுதல் ஆர்வம் அதிக அளவில் உண்டாகி இருக்கிறது.

அவர்கள் கண்களுக்கு மக்கள் படும் கஷ்டங்கள் இப்போது தெரிந்து மக்களுக்காக அரசியலிலும் உழைக்கவேண்டும் என்ற மேலான எண்ணம் வந்திருக்கிறது. இது வரையிலும் மக்கள் கஷ்டப் படவில்லையா? இல்லை இப்போது தான் அவர்களுக்கு நேரம் கிடைத்து மக்கள் கஷ்டத்தை அறிகிறார்களா? இப்போதுதான் மக்கள் படும் கஷ்டம் தெரிகிறதா? என்றும் யாரும் கேட்கக்கூடாது.. இதை விவரம் அறிந்தவர்கள் கேட்க மாட்டார்கள். அவர்கள் இந்த மாதிரி கேள்விகளை மில்லியன் டாலர் கேள்வி என்ற பட்டியலில் தள்ளிவிடுவார்கள்.

இப்போதாவது மக்கள் மேல் கருணை கொண்டு மக்கள் கஷ்டத்தை தெரிந்து கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்களே என்று தமிழர்கள் அவர்களைப் பாராட்டவேண்டும்..

அவரகளை முன்னிறுத்தி எழுதப் பட்ட இந்த கையேடு அரசியலில் கால் பதிக்க விரும்பும் எல்லோருக்கும் சிறு சிறு தேவையான மாற்றங்களுடன் உதவும் என்று நம்புகிறேன்

**அரசியலா..?**

நடிகர்கள் கட்சி ஆரம்பிப்பது, முதன் மந்திரி ஆக ஆசைப்படுவது தற்போதைய நடைமுறை. அதற்கு உரிமையில்லை என்று சொல்ல ஜனநாயக நாட்டில் எவருக்கும் உரிமையில்லை..

ஆனால் எல்லா நடிகருக்கும் அதற்குரிய நடிகர் மன்றக் கூட்டமோ, இல்லை ஈர்ப்போ கிடைப்பதில்லை..

இது விஷயமாக அவர்களுக்கு வழிகாட்டுதல் இன்றி தவிக்கின்றார்கள். அதற்கு உதவும் வகையில் ஒரு கற்பனை நடிகர் கட்சி ஆரம்பிக்கும் வழிமுறைகள் பற்றி விளக்கும் கையேடு இது.

சில ஆண்டுகளுக்கு முன்பு குமார் என்கிற வில்லன் நடிகர் “டேய், மரியாதை கெட்டுடும்” என்ற ஒரே படத்தின் மூலம் பிரபலமானது உங்களுக்கு தெரிந்ததே.

அவர் வில்லனாக நடித்த போது “நான் வெள்ளைக் காக்கான்னா, அது வெள்ளைக் காக்காதான் கருப்புன்னு எவனாவது சொன்னால் சுட்டுடுவேன்”.

இந்த டயலாக்கை 13 தடவை அந்த படத்தில் உணர்ச்சிக் கொப்பளிக்கப் பேசினார். இந்த டயலாக்கிற்காக அந்த படத்தை பார்த்தவர்கள் எத்தனையோ பேர்..

அந்தக் காலத்திலே காலர் ட்யூன் எல்லாம் கிடையாது. இருந்திருந்தால் அநேகமாக எல்லா காலர் ட்யூனும் அதுவாகவே இருந்திருக்கும்.

அடுத்தடுத்து அவரை புக் பண்ண வருகிறவர்களிடம் மேற்படி டயலாக்கை எப்படியாவது ஏதாவது ஒரு இடத்தில் சேர்த்தால் தான் படத்திற்கு ஒத்துக்கொள்வதாகக் கண்டிஷன் போட்டு விட்டார்.

மக்கள் அவரையும் அவருடைய டயலாக்கையம் வெகுவாக விரும்பியதால், புரொட்யூஸர்கள் அவரின் கண்டீஷனுக்கு ஒப்புக்கொண்டு புக் பண்ணினார்கள்.

சமீபகாலமாக படங்கள் ஊமைப்படங்கள் போல் டயலாக் குறைவாகவும், பேசுவது என்ன என்றே விளங்காத போக்கில் வருவதால் அவருக்கு மார்க்கெட் குறைந்து விட்டது.

இது பற்றி அவரிடம் சில சினிமா நிருபர்கள் கேட்டபோது

“முன்னால் சினிமா டயலாக்கிற்கு முக்கியம் இருந்தது. இப்போ டயலாக் ஒரு வார்த்தை இல்லை இரு வார்த்தைகள்தான். உணர்ச்சி பொங்க டயலாக் விட்ட காலம் போயிடுத்து. சிவாஜி இப்போ இருந்தால் படம் இல்லாமல் ரொம்பவே வேதனைப் படுவார். சிவாஜிக்கே இந்த நிலைமை என்றால் என்னைப் பற்றிக் கேட்பானேன்” என்று நழுவி விடுவார்.

இவருக்கு எப்படி அரசியல் ஆசை வந்தது.?

இவருக்கு என்று சில நண்பர்கள், விசிறிகள் உண்டு. அவர்கள் எல்லாம் நல்லவர்கள். வரிந்து கட்டிக்கொண்டு மறியல் செய்வதற்கோ, மன்றம் நடத்துவதற்கோ, முதல் ஷோவில் கட் அவுட்டுக்கு மாலை போடுவதற்கோ பாலாபிஷேகம் செய்வதற்கோ மனதளவிலும், பண அளவிலும் மற்றும் உடல் அளவிலும் முடியாதவர்கள்.. ஆனால் அரசியலில் பல கட்சிகளையும் பல நாட்டு நடப்புகளையும் பார்த்தவர்கள்.. அவர்கள்தான் இவரை அரசியலில் குதிக்கச் சொன்னவர்கள்.

இன்னும் சில காரணங்கள் அவருக்கு இருந்தது.. .

ஒன்று அவருக்கு போர் அடித்தது. படிக்கும் பழக்கம் அவருக்கு சுத்தமாகக் கிடையாது. எந்த விளையாட்டுக்குப் போனாலும் அவர் ஜெயிப்பதற்காக அழுகுணி ஆட்டம் ஆடுவார். ஆதலால் அவரை எந்த விளையாட்டிலும் சேர்த்துக் கொள்ள மாட்டார்கள். இன்டர்நெட், வாட்ஸ் ஆப், மொபைல் இவைகளுக்கு எதிரி. மூளைக்கு வேலை

கொடுக்க வேண்டும் என்று யாரோ எப்பவோ சொன்னதைப் பிடித்துக் கொண்டு விட்டார்.

கடைசியாக ஒரு பாயிண்ட்.

இந்தப் பாயிண்டு தான் அவர் அரசியலில் இறங்க முக்கியக் காரணமாயிற்று. அது அவருக்கு கோட்டூர்புரத்தில் உள்ள 5 கிரவுண்டு வீட்டு மனை. அதை அபகரிக்க இரண்டு மூன்று மந்திரிகள் முயற்சி செய்தனர். அவர்களின் முயற்சி வெற்றியடையாமல் போனதற்கு மந்திரியின் மனைவிமார்களே காரணம். ஏனென்றால் அந்த மனைக்கு அருகில் சாக்கடை பெரியதாக ஓடிக்கொண்டிருந்ததால் மனைவிமார்களுக்குச் சாக்கடை நாத்தம் சுத்தமாகப் பிடிக்கவில்லை.

இப்பொழுது மெட்ரோ வேலைக்காக அந்தச் சாக்கடையைச் சுத்தமாக துத்து விட்டதால் சில நாட்களாக அந்த மனையை யாரோ பார்வையிட்ட வண்ணம் இருக்கிறார்.

சரி அதில் வீடு கட்டி விடலாம் என்று எண்ணி சிஎம்டிஏ-இடம் பிளான் அப்ரூவலுக்குப் போகலாம் என்ற போது வீடு கட்டுவதில் உள்ள பூதாகாரப் பிரச்சினைகள் ஒன்றொன்றாகத் தெரியவந்தன. பிளான் அப்ரூவல் வாங்க ஒரு பிளானரிடம் சென்றார்.

“ரொம்ப நல்ல நல்லா சொத்து என்றும் அடுக்குமாடி கட்டினால் உடனேயே நல்ல விலைக்கு போகும்” என்றெல்லாம் வெகுவாகச் சொன்னார். “பிளானர். அப்ரூவலுக்கு 1 கோடி வரையிலும் ஆகும்.”

“என்ன? I கோடியா?” வியந்தார். நடிகர்.

“நீங்க எந்த காலத்தில் இருக்கீங்க.? எல்லாருக்கும் பங்கு வச்சா எனக்கு 1 லட்சம் நின்னா பெரிய விஷயம். இன்னொரு விஷயம். நீங்கள் கான்ட்ராக்ட் ஆக யாரிடமாவது கொடுத்து விடுங்க. மணலே கிடைக்காது. யானை விலை கொடுக்க வேண்டும். மணல் குவாரி

எல்லாம் அரசியல்வாதிகள் கையில்.. நம்பி பணம் கொடுக்கவும் முடியாது. கொடுக்காமல் இருக்கவும் முடியாது. “

அந்த நிலத்தை அபகரிக்க நிறைய அரசியல்வாதிகள் அந்த பக்கம் வந்து நிலத்தை பார்ப்பதும், இரண்டு மூன்று பேர்கள் அந்த நிலத்தை என்ன விலைக்கு தருவீர்கள் என்று விசாரிப்பதும் அதிகமாயிற்று.

நண்பர்களிடம் இது பற்றி சொன்னபோது விற்பதாக யாரிடமாவது பேசினீர்களா? என்றார்கள்.

“இல்லை அந்த நிலம் எனது தந்தையர் விட்டு சென்ற நிலம்.. அதில் வீடு கட்டடப்போகிறேன் ஆனால் இப்போது நிறைய பேர்கள் வருகிறார்கள். கேட்கிறார்கள்.” என்றார் இவர்.

அனுபவம் உள்ள ஒருவர் சொன்னார் “எதோ அரசியல் வாதியின் கண் உங்கள் சொத்தின்மேல் விழுந்துவிட்டது. நீங்கள் இப்படியே இருந்தால் அதைக் காப்பாற்றுவது இப்போதைய நிலையில் ரொம்பக் கஷ்டம். உங்களுக்குத் தெரியாமலே அதை யாரோ ஒருவர் அவர் பேருக்கு ரெஜிஸ்டெர் செய்துகொண்டுவிடுவார். நீங்களே அரசியல்வாதியாகி விடுங்கள். அதை காப்பாற்ற இப்போ உள்ள ஒரே வழி அது தான் இப்போது இதுதான் சரியான வழி” என்றார்

அப்போதுதான் ஒரு நண்பர் அரசியல் கட்சி ஆரம்பிப்பதைப் பற்றி இவரிடம் ஆலோசனை சொன்னார்.

“அரசியலா? அதிலே அரிச்சுவடி கூட எனக்குத் தெரியாதே.” நடிகர் வெகுளித்தனமாகச் சொன்னார்

“அரசியலில் பல வருஷமா இருக்கிறவங்களுக்கே அரிச்சுவடி தெரியாது. அரசியலில் அரிச்சுவடி தெரியணும்னு அவசியமில்லை.

அவங்க தலைவரையும், அவங்க குடும்பத்தையும் நல்லாத் தெரியணும்.”

“என்னைத்தான் கட்சி ஆரம்பிக்க சொல்றீங்களே. நான் எந்தத் தலைவரைத் தெரிஞ்சுக்கணும்.”

“சுத்த ஞானசூன்யமா இருக்கீங்களே. நீங்கதான் தலைவர். உங்களையும் உங்கள் குடும்பத்தையும் தான் தொண்டர்கள் தெரிஞ்சுக்குவாங்க”.

“மத்தபடி ஒண்ணும் தெரியவேண்டாமா?”

“வேண்டாம். நாங்க அதையெல்லாம் அறிக்கையா தயார் பண்ணிக் கொடுத்து விடுவோம். அப்பப்போ அறிக்கை விட்டுக் கொண்டு இருந்தால் போதும்

“அறிக்கை தயார் செய்ற நீங்களே தலைவராகி விடலாமே?” நடிகர் ரொம்ப சீரியஸா கேட்டார்

“அதில் தான் சூட்சுமம் இருக்கு. சினிமாவிலே நடிச்ச நாய், ஆட்டுக் குட்டிக்கு கிடைக்கிற மரியாதை கூட எங்களுக்குக் கிடைக்காது.” என்றார் நண்பர்

“இந்த பாருங்க முதல் அறிக்கை”.

‘தமிழ்நாட்டில் அரசியல் தலைமையிலே வெற்றிடம் ஏற்பட்டிருக்கிறது. அதைச் சரிசெய்ய உணர்ச்சி உள்ள ஒவ்வொரு தமிழனுக்கும் கடமை இருக்கிறது.. தமிழனாய்ப் பிறந்து, தமிழ் மண்ணில் வளர்ந்து, தமிழ் மக்களுக்காகவே நடித்து, தமிழ் மக்களுக்காகவே வாழ்ந்து கொண்டிருக்கும் எனக்குத் தமிழ்நாட்டை எப்பாடுபட்டும் காக்கும் கடமை உள்ளது என்பதை இதன் மூலம் தெரிவித்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன். நீங்கள் என்னைக் கேள்விகள் கேட்கலாம் உங்கள் பலதரப்பட்ட கேள்விகளுக்கு நான்

பதில் அளிக்கக் கடமைப்பட்டு இருக்கிறேன். நீங்கள் என்னைக் கேள்வி கேட்க எல்லா உரிமையும் உண்டு. உங்கள் கேள்விகளுக்கு உரிய மரியாதைக் கொடுத்து மதிப்புக் கொடுத்து அதற்கு வேண்டிய விளக்கங்களும், பதிலும் தர எனக்கு பொறுப்பு உள்ளது என்பதை நானும் அறிவேன்.. நீங்களும் எனது தார்மீக பொறுப்பை உணர்வீர்கள் என்று உறுதியாக நம்புகிறேன். இனி முழுவதும் என்னை அரசியலில் ஈடுபடுத்திக் கொண்டு, உங்களுக்கு உங்களுக்காகவே என் எஞ்சிய காலத்தை அர்ப்பணிக்க முடிவு எடுத்துவிட்டதால் தயவுசெய்து சினிமா, சொந்த வாழ்க்கை பற்றிக் கேள்விகள் எழுப்ப வேண்டாம்.

‘உங்கள் கேள்விகள் வந்தவுடன் அதற்கு ஒரு தொடர் எண் (Serial Number) தரப்பட்டு கேள்விகள் தொடர்ச்சியாக வரும். உங்கள் கேள்வி ஏற்கனவே கேட்கப்பட்டு இருந்தாலும் கூட உங்கள் கேள்வியைப் போட்டு இதற்கு விளக்கம் / விடை இந்த தொடர் எண் கேள்வியில் போட்டு உள்ளோம். தயவுசெய்து அதைப் பார்க்கவும் என்று போடுவோம். இதைச் சொல்வதன் நோக்கம் எல்லா கேள்விகளும், அதைக் கேட்கும் நீங்களும் மரியாதைக்குரியவர்கள். உங்களில் எவர் கேள்வியையும் அலட்சியப்படுத்தவோ இல்லை அவமானப்படுத்தவோ எவருக்கும் அடுத்தவரின் தன்மான உணர்ச்சியை மதிக்கும் எவருக்கும் உரிமை கிடையாது.

‘நீங்கள் என்னை, என் எண்ணத்தை, என் எழுச்சியை, ஆதரித்து, என் முயற்சியை வெற்றி பெறச் செய்வீர்கள் என்ற நம்பிக்கையுடன் உங்களை உரிமையோடு வேண்டி விரும்பிக் கேட்டுக்கொள்கிறேன்.

‘இந்தப் பத்திரிகையில் உங்கள் கேள்விகள் எனது பதில்கள் என்ற பகுதி தொடர்ந்து வரும்.

“அறிக்கை நல்லாவே இருக்கே” நடிகர் அதிசயித்து நின்றார்.

பத்திரிகை வெளிவந்தவுடன் ஒரே பரபரப்பு. டீ கடைகள், நாற்சந்திகள், டிரெயின் எங்கு எல்லாம் பலதரப்பட்ட மக்கள் அதிகமாக கூடினார்களோ அவரகள் நடிகரின் அணுகுமுறையைப் பாராட்டினார்கள். அவர்கள் நடிகரின் அறிக்கையை வெகுவாக பாராட்டினார்கள்.

அரசியல் பார்வையாளர்கள், மீடியா அறிவுஜீவிகள் வாய்பிளந்து நின்றார்கள்.

“அரசியலில் ஒரு பூகம்பம்”, “அரசியலில் ஒரு அணுகுண்டு” என்று பெட்டிச் செய்திகள் எல்லா பத்திரிகைகளிலும் வெளிவந்தன.

(அரசியல் கிசு கிசு என்று பெயர் சொல்ல விரும்பாத அரசியலில் கொட்டை போட்ட ஒருவர், முதன் மந்திரி பன்னீர் கூடிப்பேசி நடிகரை கண்காணிக்கும் படி டிஐஜி க்கு உத்தரவிட்டிருப்பதாகப் பத்திரிகையில் வெளியிட்டார். டெல்லி கூட இதுபற்றி ஒரு ரிப்போர்ட் தயார் செய்யச் சொல்லி இருப்பதாக இன்னொரு பெட்டி செய்தி.

செய்தி சூடுபிடிக்க ஆரம்பித்தவுடன் அவர் தொடர் பேட்டி வெளியிடும் பத்திரிகை சேல்ஸ் புதிய இலக்கை எட்டியது.

“எடிட்டர் சார், இப்போ நம்ம சர்க்குலேஷன் அதிகரித்துக் கொண்டு வருகிறது. நம் டிவி விளம்பரத்திற்கு நம் பத்திரிகை வழக்கமாகப் போடும் நடிகையின் படத்திற்குப் பதிலாக நடிகரின் படத்தைப் போட்டு விடலாம். இந்த வார நட்சத்திரக் கேள்வி கேட்பவருக்கு ஒரு கோல்டு காயின். இந்த தங்க நாணயம் நடிகர் கொடுத்துவிடுவார். நட்சத்திரக் கேள்வி கேட்பவரோட போட்டோ-வையும் அட்வர்டைசிங்கில் நடிகர் படத்தோட சேர்த்து போடலாம்”

பத்திரிக்கை உதவி ஆசிரியர் மகிழ்ச்சியுடன் சொன்னார்

“நல்ல ஐடியா. உனக்கு கூட நல்ல ஐடியா சமயத்தில் வர்ரதே. வெரிகுட்” என்றார் எடிட்டர்

அடுத்த வாரம் எல்லா இடத்திலும், பத்திரிகை ஸ்டாண்டிலும் நடிகர் சிரித்துக் கொண்டு நின்றார்.

“உங்களுக்கு பதில் சொல்ல நான் ரெடி. கேள்வி கேளுங்கள். இரண்டு கிராம் தங்கம் வெல்லுங்கள்”. எங்கும் விளம்பரம்

“என்னடா இருக்கிற தலைவலி போதாதுன்னுட்டு புதிய தலைவலி கிளம்பி இருக்கு.. ஏதோ BJP பணம் கொடுத்து அரசியலில் நடிகர்களைக் குதிக்க வைத்துக் குழப்பம் ஏற்படுத்தத் திட்டம் தீட்டியிருப்பதாக ஒரு வதந்தி வந்திருக்கு.. அதுக்காக இப்படியா? இவருக்கு இரண்டு ஓட்டு விழுமா?”

ஒரு அரசியல் விமர்சகர் அடுத்த விமர்சகரைப் பார்த்துச் சொன்னார்.

“இரண்டு ஓட்டா. மூன்று ஓட்டா. என்ற பேச்சு இல்லை. பி.ஜே.பி எல்லா நடிகரையும் கேட்டிருக்காங்க. இந்த நடிகருக்கு மார்க்கெட்டும் படமும் இல்லை. பணமும் இல்லை. பணம் வருதுன்னு யார் வேண்டாம்னு சொல்லுவாங்க.”

“பேர் போயிடாதா?”

“டேய் காமெடி பண்ணாதே. என்னமோ மார்க்கட் பிச்சுக்கிட்டுப் போற மாதிரியும் பெரிய ஸ்டார் வேல்யூ போயிடற மாதிரியும் பேசிகிட்டு இருக்காதே.”

“ஆனாலும் ஏதோ புதுமையாய் செய்யணும்னு ஆசைப் படுகிறார். அரைச்ச மாவையே அரைக்கணும்னு அரசியல்லே இருந்த பண்பாட்டை மாற்றி வேறு மாதிரி மாத்தி யோசிக்க முயற்சி செய்கிறார்.”

“ஆனால் அரசியல்வாதிங்க கிட்ட குறை சொல்லி பயனில்லை. நம்ம மேலேயும் நிறைய குறை இருக்கு. ஜனநாயகம் என்பது மக்களின்

பிரதிபலிப்பு. நாம் எப்படி இருக்கிறோமோ அப்படியே தான் அரசாங்கம் அமையும். ஒட்டு போட்டவர்கள் யாரு. 50 சதவீதம் 55 சதவீதம் அதாவது பாதிப்பேருக்கு ஓட்டளிப்பதில் நாட்டு நடப்பில் நல்ல அரசாங்கம் அமைப்பதில் ஈடுபாடு இல்லை. அவங்களுக்கு எதுவும் தற்போதைய கல்ச்சர்படி “எதுவும் ஓகே”. ஏன்? அவர்களுக்கு அரசாங்கத்தால் ஏதும் ஆகப்போவதில்லை. அவங்களுக்கு பண வசதி இருக்கிறது. அரசாங்கத்திலிருந்து பெறவேண்டிய பிறப்பு சான்றிதழ் இறப்பு சான்றிதழ் பட் ஓட்டுநர் உரிமம் ரேஷன் அட்டை கட்டட அனுமதி எல்லாவற்றிற்கும் இடைத்தரகர்கள் இருக்கிறார்கள். பணத்தை வீசி இறைத்தால் வீட்டிலிருந்தபடியே எதையும் பெற வசதி இருக்கிறது.”

“ஓட்டு போடுகிறவர்களில் 40% ஒரு கட்சிக்கும் மற்ற கட்சிகளுக்கு 60% போடுகிறார்கள். அதாவது மொத்த வாக்காளர்களில் 50 x 40 = 20% சதவீதம் ஓட்டுப் பெறுபவர்கள் ஆட்சிக்கு வருகிறார்கள். அவர்கள் வரவேண்டாம் என்று நினைக்கிறவர்கள் 80%. ஆனால் அவர்கள் பல கூறுகளாகப் பிரிந்து இருக்கிறார்கள். அதனால் ஜனநாயக மரபுகள்படி அதிக வாக்கு அளித்து, மக்களின் வாக்குகளைப் பெருவாரியாக அளித்து எங்களை உங்களுக்கு உழைக்க உத்தரவிட்ட மக்களுக்கு நன்றி என்று மேடை போட்டு சொல்லிவிட்டு ஆட்சிக் கட்டிலில் அமர்கிறார்கள். அத்தைவிடு.”

“உன்விளக்கம்எல்லாம்வேண்டாம். காலேஜிலே ஆசிரியரா இருக்கான். காலேஜ் லீவு விட்டாச்சு. ஆள் கிடைச்சா போரடிக்கிறான். பேராசிரியர் சார்உங்க பீரியட் முடிந்துவிட்டது. வெட்டிப்பேச்சு” நண்பர் கலாய்த்தார்.

“ஏதோ பேசும் போதெல்லாம் பெரிய காரணத்தோடு பேசுபவர் போல சலித்துக் கொண்டு “தமிழ்நாடு இப்போது உள்ள சூழ்நிலையில் ‘யாராவது நல்ல ஆட்சி தரமாட்டார்களா?’ என்று மக்கள் காத்துக்கொண்டு இருக்கிறார்கள்.” என்றார் முதல் விமர்சகர்

“ஏன் இப்போதைக்கு உள்ள ஆட்சி என்ன ஆச்சு? டேய், இவனை சொல்லக்கூடாது. இவனோடு நட்பு வைச்சிருக்கோமே. நம்மைச் சொல்லணும்.”

“ஏண்டா என்ன ஆச்சு?.

“பின்னே என்னடா இப்போ இருக்கிற எம்.எல்.ஏ. . க்களுக்கு ஆட்சி போனா திரும்பவும் எம்.எல்.ஏ. ஆக முடியாது என்று அசைக்க முடியாத நம்பிக்கை. எம்எல்ஏ க்களை எப்படியும் தன்பக்கம் நிலைத்து வைத்திருக்க வேண்டிய கட்டாயம் சி எம். க்கு.. எம்.எல்.ஏ. . சம்பளத்தை உயர்த்து.. படியை உயர்த்து.. நம் நாட்டிலே எல்லோருமே எங்கேயோ எண்ணை மழை பெய்கிறது என்று முன்னாளில் சொல்லுவார்கள். அப்படி ஒரு தான்தோன்றித் தனம்.”

“கைப்பேசிக்கு 300 ரூ மாதம் பூரா பேசு நெட்பாருன்னு ஓயாமல் விளம்பரம் கூவிக் கூவி வித்துக்கிட்டு இருக்கான். நம்ம எம்.எல்.ஏ. . க்களுக்கு போன் அலவன்சு மாதத்திற்கு ரூ. 7500. யாரோ ஒருத்தன் கேட்டா அவன் மடையன்.”

“ஐயா போதும் பேச்சை விடு. நம்ம நடிகர் கட்சியைப் பற்றி மட்டும் இப்போ பேசுவோம்.

“இது போணியாகும்றே”

“முதல் இல்லாத தொழில். இன்னொரு விஷயம். நம் தமிழ்நாட்டிலே ஊர்ல பாதிப் பேருக்கு மேல் ஒரு பதவி தேவையாயிருக்கு.. நகர செயலாளர், வட்டச் செயலாளர், துணைச்

செயலாளர், மகளிர் பிரிவு, மாணவர் பிரிவு, பொறியியல் பிரிவு, என்னென்னவோ பிரிவுகள். எந்த பதவியும் இல்லாதவர்கள் இவரிடம் வருவார்கள். டிஜிட்டல் பேனர் ரொம்ப சீப் ஆகிவிட்டது. ஆளுயர போஸ்டரும் அதில் இந்தப் பதவியை விரும்பிகள் பெயருடன் தலைவரும் நிற்பார். நிறைய போஸ்டர்கள் வந்தால் கட்சி வளர்வதற்கு அளவுகோல். “

“சரி அடுத்த வார பத்திரிகை நாளைக்கு வந்து விடுமா? அதில் அவர் அறிக்கையைப் பார்ப்போம். போணியாகுமா. இல்லை ஆகாதா என்று பேசுவோம். இன்றைக்கு பிரதோஷம். சீக்கிரம் கோயிலுக்கு போகணும்.

பத்திரிகைக் கிடைக்கவில்லை. நட்சத்திரக் கேள்வி கேட்டவர் ஒரு கல்லூரி மாணவர். எல்லா கல்லூரி மாணவர்களும் ஏதோ அவர்களுக்கே தங்க நாணயம் கிடைத்தது போல் சந்தோஷப்பட்டார்கள். பத்திரிகை வாங்கினார்கள்.

கேள்வி : உங்களுக்கு. சி எம் ஆவதற்கு என்ன திறமை இருக்கு என்று நினைக்கிறீர்கள்?

பதில் : தம்பி உன் கேள்வி என்னைப் பெருத்த சிந்தனையில் ஆழ்த்தி விட்டது. பொதுவாக மாணவர்கள் அரசியலுக்கு வரக்கூடாது அவர்கள் முழுக் கவனம் படிப்பில் மட்டும்தான் இருக்க வேண்டும் என்று திடமாக நம்பி இருப்பவன். ஆனால். பீ. ஈ (இறுதி ஆண்டு) என்று தெரிந்தவுடன் உன் கேள்விக்குப் பதில் அளிக்கலாம் என்று தெளிந்தேன்.

ஏதோ சந்தர்ப்ப வசத்தால் நீ படிக்கும் கல்லூரியில் ஆசிரியராக என் நண்பன் ஒருவர் பணிபுரிகிறார். அவர் மூலம் நான் பெற்ற விவரங்கள்.

“கல்லூரியில் நல்ல பெயர் எடுத்த சில மாணவர்களில் நீயும் ஒருவன். அரியர்ஸ் வைக்காமல் எல்லா பாடங்களிலும் நல்ல

மார்க் எடுத்து உள்ளவன்.. விளையாட்டு மற்றும் பொதுச் சேவைகளில் பங்கு கொள்பவன்.. இவ்வளவு நல்ல குணங்களோடு உள்ளவர்கள் அரசியலுக்கு வரவேண்டும்.. நீங்களெல்லாம் முயன்றால் பல வேலை கிடைக்கும்.. இப்போதுள்ள அரசியலில் உள்ளவர்களில் பலருக்கு வேறு வேலை கிடைக்காது.. கட்டை பஞ்சாயத்து போன்ற சுயதொழில்கள்தான் சாத்தியம்.. சரி, உன் கேள்விக்கு வருவோம். நான் சி எம் ஆவேன் என்று எங்கு சொன்னேன். எப்போது சொன்னேன். என் கட்சி வெற்றி பெற்றால் சி எம். க்கு விண்ணப்பம் கேட்பேன். ஏன்? யார் வேண்டுமானாலும், மாற்று கட்சியினர், படித்தவர், படிக்காதவர், மெத்தப் படித்தவர் யார் வேண்டுமானாலும் விண்ணப்பிக்கலாம்.

டிவியில் தோன்றி அவர்கள் தெரிந்து வைத்துள்ள செய்திகள், திட்டங்கள் சொல்லலாம். ஏதாவது ஒரு துறையில் பரிச்சயம் உள்ளவராக இருத்தல் வேண்டும். அந்தத் துறை பற்றி அவருக்கு நன்கு புரிதல் இருப்பது அவசியம்.. மொத்தத்தில் ஒரு முதன்மை அதிகாரி போல் செயல்படவேண்டும். நிதி நிலைமை சீராக வைத்துக்கொள்ளவேண்டும்

சிஎம் தேடுதல் முடிந்தவுடன் அமைச்சர் தேடுதல் ஆரம்பமாகும். ஒன்றுமே தெரியாத, எந்தத் துறையிலும் எப்படி பணம் எடுக்கலாம் என்று மட்டும் தெரிந்த அமைச்சர்கள் காலம் மலை ஏறும். உங்களுக்கு முதல் தங்கக் காசை வழங்குவதில் பெருமை கொள்கிறேன்.

“கேள்வி பதில் பகுதி சூப்பர். முதல் தடவையா சி எம். க்கு விண்ணப்பம் கேட்டுத் தெரிந்தெடுக்க ஆசைப்படுகிறார். இந்தக் கட்சியிலே 25 வருஷமா இருக்கறேன். எனக்கு மந்திரி பதவி கிடைக்கவே கிடைக்காது. பழைய மந்திரி பையன்கள் ஆறு பேரு

துண்டு போட்டு வச்சுட்டாங்க. எங்க கட்சி ஆட்சிக்கு வந்தா அவங்கதான் மந்திரி. மீதியுள்ள மந்திரி சீட்டுக்கு கேட்டா ரூ 20 கோடி 30 கோடி தலைவர் கேட்பாரு. எங்கே போறது அவ்வளவு பணத்துக்கு? நானெல்லாம் கடைசிவரை தொண்டனா மட்டும் இருந்துட்டு போஸ்டர் ஒட்டிட்டு போகவேண்டியதுதான். கொஞ்சம் படிச்சு விஷயமும் தெரிஞ்சுக்கிட்டா இந்த கட்சியிலே சான்ஸ் கிடைக்கும் போலே இருக்கே."

பல வருடங்களா அரசியலில் கட்சித்தொண்டனாக இருப்பவனின் மனக்குமுறல் வெளிப்பட்டது.

"இது ஜனநாயகத்திற்கு விடப்பட்ட சவால். ஒருவர் புதிதாய் கட்சி ஆரம்பித்து சி எம். க்கு வேலை கொடுப்பாராம். இது என்ன வேடிக்கை? நாம இதை இப்படியே விட்டுவிடக்கூடாது. நாம பத்திரிகைக்கு எழுதியே ஆகணும்." - ஒரு கொட்டை போட்ட மந்திரியின் வெளிப்பாடு

ஆளும் கட்சி, எதிர்க்கட்சி, லெட்டர் பேட் கட்சி, எப்போவோ உழைத்த கட்சி, யார் பேரிலோ ஆரம்பிக்கப்பட்ட கட்சி, எல்லாக் கட்சிகளிகலிருந்தும் எதிர்ப்புக் கணைகள் லெட்டர்களாகக் குவிந்தன.

பத்திரிகை ஆசிரியர் பெருமிதத்தில் மிதந்தார். சுருக்கமாக அடுத்த வாரத்தில் "தலைவர் எல்லா கடிதங்ளையும் அகர வரிசைப்படிப் பிரசுரித்தே ஆக வேண்டும் என்று அன்புக் கட்டளை பிறப்பித்துள்ளார். அதனை ஒட்டி அடுத்த இதழோடு இலவச இணைப்பாக எந்த வித விளம்பரமும் இன்றி 150 பக்கத்திற்கு ஒரு இணைப்பு வரும். அன்பர்கள் அதை கேட்டு பெற அன்புடன் கேட்டுக்கொள்கிறேன். தலைவருக்கு எல்லா தலைவரும் எல்லாப் பத்திரிகைகளும் மக்களைப்போல முக்கியமானவர்கள் அதனால் எல்லா கடிதங்களையும் வரிசைப்படுத்தச் சொல்லிவிட்டார். தலைவர் முழுலெட்டரையும் போடச் சொன்னாராம். அப்படிப் போட்டால்

பொன்னியின் செல்வன் அளவிற்கு வரும் என்று எடுத்துச் சொல்லி மலைமலையாய் வந்திருக்கும் கடிதக் குவியல்ளைக் காட்டி 100 காலேஜ் மாணவர்கள் (எம் பி ஏ படிக்கிற வங்க) போட்டுச் சுருக்கங்களை போட தலைவர் அனுமதி வாங்கி இருக்கிறோம் என்று அன்புடன் தெரிவித்துக்கொள்கிறோம். ஒரு பெரிய கல்யாண மஹாலை வாடகைக்கு எடுத்து இரவு பகலாய் மாணவர்கள் உங்களுக்காக உழைக்கிறார்கள் என்றும் தெரிவித்துக் கொள்கிறேன். நாளை இரவுக்குள் கடிதங்கள் எண்ணிக்கை சரியாக தெரிந்து விடும். நாளை இரவு 9 மணி நியூஸில் கடிதங்களின் எண்ணிக்கையை அறிவிப்பு செய்ய ஏற்பாடு செய்துள்ளோம்.”

“என்ன 6, 72, 147 அப்பா, டேய் இரண்டு ஓட்டு விழுமான்னு கேட்டியே? 6, 72, 147 இதிலே 20% ஆதரவுன்னா கூட 1, 34, 400 ஓட்டு. ஒண்ணுமே பண்ணலை. கட்சியே ஆரம்பிக்லை. பார்த்தியா ரெஸ்பான்ஸ்.”

ஒரு அரசியல் விமர்சகர் :- “6,72,000 க்கு மேல் கடிதங்கள் வந்திருப்பதாக எடிட்டர் சொன்னார். 6 கோடி பேரில் 6,72,000 என்பது 1% பெரிய எண்.. எனக்குப் போய் இவ்வளவு கடிதங்கள், பாராட்டுக்கள். எதிர்ப்புகள் என்பது முக்கியமல்ல ஆனால் 60% சதவீதத்திற்கு மேல் ஒரே ‘பாயிண்டை’ எத்தனையோ விதங்களில் சில கட்சி களிலிருந்தும், அரசாங்க அதிகாரிகள் கேட்டிருக்கிறார்கள். டெல்லியிலிருந்து 2 செக்ரடரிகளும் எழுதி இருக்கிறார்கள்”

நடிகர் அதிர்ந்து போய் வியந்து நின்றார்

அந்த ஒரே கேள்வி : கட்சித் தலைவர் தான் சி எம்.. இதுவரை எழுதாத சட்டம். நீங்கள் ஏன் வித்தியாசமாக நினைக்கீறீர்கள்?

“ஒரு பியூன் வேலைக்கு கூட அந்த வெரிஃபிகேஷன், இந்த சர்டிபிகேட் என்று எவ்வளவோ நடைமுறை ஒழுங்குகள். ஆனால் சி எம். வேலைக்கு- சே சே சொல்லவே வெட்கமா இருக்குது. சி எம். பதவி அவ்வளவு குறைவாக போய்விட்டதா? நம் தலைவர்கள் தேர்தல் முறை, ஜனநாயகம் என்று சொன்னார்களே தவிர தகுதி வாய்ந்த சிஎம் வரக்கூடாது என்று சொல்லவில்லை. ஜனநாயகத்தை கொள்கையாக வைத்துக் கொள்ள வேண்டும் . அதனால் மக்களுக்கு நல்லது செய்ய வேண்டும் என்று எண்ண வேண்டுமே தவிர அதை கேலிக்கூத்தாகி விடக்கூடாது.”

நடிகரின் பதில் அனைவரையும் வியப்புக்குள்ளாக்கியது

அன்பர்கள் 150 பக்கங்கள் கொண்ட20001 கடிதங்கள் என்ற தலைப்பில் வரும். இலவச இணைப்பைக் கேட்டுப் பெற்றுக் கொள்ளுங்கள். இதில் முதலில் சொன்னபடி அகர வரிசைப்படி முதல் 20001 கடிதங்கள் வரும். மீதியுள்ள கடிதங்கள் தொடர்ந்து வரும்.

பின்குறிப்பு :- பல நண்பர்கள் ஒரே கேள்வியை பலமாதிரி கேட்டிருப்பதால் அந்த மாதிரி கேள்விகளை ஒரே குரூப் பண்ணி கேட்டவர்கள் பேர்களை போட்டிருக்கிறோம். சில நண்பர்கள் 4 – 5 கேள்விகள் தனித்தனியாக கேட்கிறார்கள். தலைவர் ஒருவர் வாரத்திற்கு ஒரு கேள்வி மட்டும் கேட்டால் நிறைய பேர்களுக்கு வாய்ப்பு கிடைக்கும் என்று நினைக்கிறார்.

“யோவ் என்னடா இது கிணறு வெட்ட பூதம் வந்தது என்பார்கள். கேள்வி கேட்டு பூதம் வந்தே வந்து விட்டது” எங்கும் விமர்சனம்.

அடுத்த வார “தங்கக் காசு பரிசு வாங்கும் கேள்வியாக” ஒரு பெயர் வெளியிட விரும்பாத அரசியல்வாதியிடமிருந்து வந்திருந்தது. அவர் நல்ல வேளையாக ஒரு குறிப்பு வைத்திருந்தார்.

**எஸ். வெங்கட்ராமன்**

ஆசிரியர் அவர்களுக்கு,

என்னுடைய கேள்வி தங்கக்காசு பரிசு பெறுமானால், அந்த காசை எதாவது பின் தங்கிய கிராமத்தில் அரசாங்கப் பள்ளியில் +2 வில் அதிக மதிப்பெண் எடுத்த மாணவருக்கு வழங்கவும்.

சி எம். மந்திரி எல்லாம் விண்ணப்பம் போட்டு தேர்வு வந்தால் எம்.எல்.ஏ. க்கள் என்ன செய்வார்கள்?

இந்த கேள்வியை தங்கக் காசுக்காகத் தேர்ந்தெடுத்ததற்காக தேர்வுக் குழுவைப் பாராட்டுகிறேன். இந்த கேள்வி ஜனநாயகத்தின் அடிப்படையை மக்கள் சரியாக புரிந்து கொள்வதற்கான கேள்வி.. அறிவு ஜீவிகள் மட்டுமின்றி எல்லா மக்களும் இந்த கேள்விக்கான விடையை புரிந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

அடிப்படையில் எம்.எல்.ஏ. என்பவர் யார்? மக்களின் பிரதிநிதி.. அந்தத் தொகுதியில் உள்ள மக்களுக்கு அரசாங்கத்தால் செய்யக்கூடிய வேலைகளை சீரிய முறையில் நேர்த்தியாக நேரத்தில் நடத்தி முடிக்கவும் தொகுதியில் மக்களின் வாழ்க்கையை மேம்படுத்துவதற்கு ஏற்ற திட்டங்களைக் கண்டு அறியவும், அதை நடைமுறைப்படுத்த ஆவன செய்யவும் தொகுதி மக்கள் அவர்கள் வேலைகளுக்கு நடுவில் இந்தப் பணியை செய்ய முடியாது என்ற காரணத்தால், அவர்களின் பிரதிநிதியாக அந்தத் தொகுதி மக்களின் வேலைக்காக அரசியல் சாசனத்தால் அங்கீகரிக்கப்பட்டவர்.. அவர் முதல் வேலை இல்லை. ஒரே வேலை தொகுதி மக்களுடன் நேரடி தொடர்பு கொள்ளுதல், அவர்கள் வாழ்க்கையில் சந்திக்கும் ஏராளமான பிரச்சினைகள் பற்றி தெரிந்து கொள்ளுதல், அந்த பிரச்சினைகளில் பெருவாரி மக்களை பாதிக்கும் விஷயமாக இருந்தால் அதற்கு தீர்வு காணுதல்., தீர்வை செயல்படுத்துவதற்கு வேண்டியது செய்தல், எம்.எல்.ஏ. அமைச்சராகி

தொகுதி பக்கமே போக முடியவில்லை. வேலைபளு என்று சொல்லி அடுத்த தேர்தலுக்கு மக்களைச் சந்திக்கச் செல்வது முறையல்ல..

நான் ஒரு கேள்விக்கு விடை சொல்லும் போது, அதைச் சார்ந்த மற்ற விஷயங்களையும் தெளிவுபடுத்த ஆசைப்படுகிறேன். அந்த முயற்சி நான் எடுக்கவில்லையென்றால், இந்த கேள்வி ஒட்டி பல துணைக்கேள்விகளுக்கு வழிவகுக்கும்.

இது என்ன? புதுசா இருக்கே. செகரட்டரி என்ற பதவியில் அரசு அலுவலர்கள் இருக்கிறார்களே. அவர்களே இந்த வேலையை செய்து விடலாமே என்று கேட்கலாம்.

ஒரு துறை என்று எடுத்துக் கொண்டால் பல கிளைத் துறைகள் இருக்கும். ஒவ்வொன்றிற்கும் ஒரு செக்ரடரி இருப்பார். அவர்களை ஒருங்கிணைத்துச் செயல்படுத்துவார் இந்த மந்திரி. மேலும் அரசாங்க அலுவலர் திறம்பட வேலை செய்யாமல் இருந்தால் (சில அரசு அலுவலர்கள் இப்படித்தான் இருக்கிறார்கள்) அவர்களை அரசாங்கம் ஒன்றும் செய்ய முடியாது.

இன்னொரு விஷயம். அரசியல்வாதி எப்போதும் எவ்வளவு ஓட்டு எங்கு விழும் என்று தான் பார்க்கிறார். சரியான தீர்வு, நியாயம், தர்மம் ஏன் எது மக்களுக்கு நீண்ட நாள் அடிப்படையில் நன்மை தரும் என்பதெல்லாம் இரண்டாம் பட்சம் தான்..

அந்த அமைச்சர் அப்படி இருக்க முடியாது. மேலும் ஒரு செகரடரி இன்னொரு செகரடரியைப் பார்க்கவேண்டும் என்றால் யார் ஸீனியர், யார் எந்த பேட்ச் இன்னும் எவ்வளவோ நிர்வாகச் சிக்கல் இருக்கும்.

மந்திரியிடம் சொன்னால் வேலையை முடித்துக் கொடுக்க வேண்டும்.

அடுத்த கேள்வி எழுவது இயற்கை. இப்படி எல்லா வேலைகளையும் தெரிந்து எடுக்கப்பட்ட மந்திரிகளே செய்தால் எம்.எல்.ஏ. -க்கள் என்ன செய்ய முடியும்.

நான் சில வருடங்களுக்கு முன்பு ஒரு ஹிந்து மடத்திற்குச் சென்றிருந்தேன் அங்கு ஒரு நிர்வாக அதிகாரி இருந்தார். எதைக்கேட்டாலும் யாரைக் கேட்டாலும் நிர்வாக அதிகாரியை க் கேளுங்க. நிர்வாக அதிகாரியைக் கேளுங்க என்றே எல்லோரும் சொன்னார்கள். அப்போது நான் கேட்ட கேள்வி "எல்லாம் நிர்வாக அதிகாரி செய்தால் நீங்கள் செய்யும் வேலைதான் என்ன? உங்களுடைய அதிகாரம் என்ன?"

"அதற்கு மடத்தலைவர் அவர் சரியாக செய்கிறாரா என்று பார்ப்பது தான் எங்கள் வேலை. சரியாக செய்யவில்லை என்றால் 24 மணி நேரத்தில் அவரை பதவியில் இருந்து எடுக்கவும் எங்களுக்கு அதிகாரம் உண்டு.

"எல்லா எம்.எல்.ஏ. க்களும் கூடி எந்த மந்திரியையும் உடனே நீக்கலாம். கட்சிக்காரங்களை யாராவது தொடர்பு கொண்டால் "இப்போ முன்னே மாதிரி எல்லாம் இல்லை. முன்னே எனக்கும், தலைவருக்கும் மட்டும். தான் இப்ப மந்திரி என்ற பெயரிலே பெரிய பெருச்சாளி உட்கார்ந்திருக்கு. மந்திரி படிச்சவங்களா இருக்கணும். கட்சிக்காரங்க கூடாது. நிறைய கட்டுப்பாடுகள் இருக்க வேண்டும். ஐடியா நன்றாக இருக்கு. ஆனா நம்ம ஆளுங்க படு கில்லாடிங்க. எதையும் எப்படியும் உபயோகமில்லாமல் செய்து பழைய முறையே நல்லது என்ற மக்களை சொல்ல வைத்து விடுவார்கள்."

"பதிவுத்துறை பாருங்க ஆன் லைன் செய்வதற்கு எத்தனை சிக்கல்கள். பாஸ்போர்ட் பாருங்கள். பாஸ்போர்ட் விவகாரம் வேறு. ஒரே தடவை போய் போராடினால் போதும். அதில் ஜாஸ்தி பிசினஸ் இல்லை. பதிவுத்துறை பாருங்க. தினம் தினம் பணம் புரள்கிற இடம்.

ரியல் எஸ்டேட் பண்றவங்க எல்லாம் கோடீஸ்வரங்க. அவங்களுக்கு எத்தனையோ புரோக்கர்கள். அவங்க விடுவாங்களா?”

“டெக்னாலஜி மாறிக்கிட்டே இருக்கு. ரேஷன் கார்டு என்னாச்சு. அந்த ஆபீஸா இந்த ஆபீஸா அலைய விட்டு போலி ரேஷன் கார்டு சர்வ சாதாரணமாக இருந்தது. இப்போ எல்லாம் முடிந்துவிட்டது. இல்லையா. அது மாதிரிதான் இதுவும்.”

“அப்பா. இது பூதம்னு நினைச்சோம். பெரும் பூதமா இருக்கும் போலிருக்கே. போற போக்கைப் பாத்தா மத்திய அரசையே அசைக்கும் போல இருக்கே. “

ஒரு அரசியல் விமர்சகர் ஒரு செய்தி சொன்னார். “ஐயோ, உனக்கு விஷயம் தெரியாதா? யாரோ காங்கிரஸ்காரர் டெல்லியிலிருந்து போன்லே தொடர்பு கொண்டாராம். போனை எடுக்கவே இல்லையாம். உடனே ஒரு ஒரு தலைவர் உள்ளூர் காங்கிரஸ்காரரை விட்டு நேரடியாய்ப் பார்க்கச் சொன்னாராம்.

“காங்கிரஸ் கூட கூட்டணி வையுங்க. காங்கிரஸ் திமுகவை கழட்டி விட நேரம் பார்த்து கிட்டு இருக்கு. காங்கிரஸ் அகில இந்திய கட்சி. நாட்டுக்கு சுதந்திரம் வாங்கிக் கொடுத்த கட்சி. நாட்டுக்காக பாடுபட்ட பாரதியார், வஉசி, காந்தி இருந்த கட்சி என்று ஒரு ஆறு பேர் சேர்ந்த ஒரு குழு வந்ததாம்.”

நடிகர் “நானே உங்களுடன் பேச வேண்டும் என்றிருந்தேன். அதனால்தான் நீங்கள் கேட்டவுடன் டைம் கொடுத்து ஒத்துக் கொண்டேன்.” என்றாராம்

ஒரு காங்கிரஸ் பிரமுகர் “அண்ணே பார்த்தீங்களே தலைவரே பேச ஆசைப்பட்டாராம்” அடுத்த தலைவரிடம் பகிர்ந்து கொண்டார் இன்னொரு அரசியல் விமர்சகர்

“அப்புறம்..” சுவாரஸ்யம் கூட்டினார் முதலில் கேட்ட விமர்சகர்

“அது பெரிய தமாஷ் அதனாலே யாரும் வெளியிலே விஷயத்தை விடல்லே” கேட்டவரின் ஆர்வத்தை மேலும் தூண்டினார்

“உங்க கட்சியும் அறுபது வருஷமா ஆட்சி செய்தீங்க. ஏழைளை ஏழைகளாவே வைத்திருக்கீங்களே. நீங்கள் எப்போதாவது இதுபற்றி நினைத்ததுண்டா? அவர்களிடம் வருத்தம் தெரிவித்து வருந்தியது உண்டா? காந்தியே காங்கிரஸைக் கலைக்க வேண்டும் என்று சொன்னார். ஏன் செய்யவில்லை? நேரு குடும்பத்திற்கு பரம்பரை சொத்து மாதிரி காங்கிரஸை ஏன் மாற்றினீர்கள்? தயவுசெய்து இந்த கேள்விக்கெல்லாம் பதில் தெரிந்து கொண்டு வாருங்கள். தலைவருக்கு போன் செய்து “இதற்கு மேல் அசிங்கப்பட முடியாது இதுவரையில் ஊழல் பற்றி மட்டும் பேசினார்கள். இவர் அதுக்கும் மேலே பேசறார். இவர் நமக்கு சரிப்படமாட்டார்..”

“ரொம்ப தமாஷா இருக்கு இது ரொம்ப பெரிய விஷயம். உனக்கு எப்படி தெரிந்தது கொக்கி மாட்டினார்?”

“எனக்கு எல்லா இடத்திலேயும் ஆள் இருக்கு தெரியுமா?” ஒரு பெருமிதம் அவர் முகத்தில் பரவியது.

அடுத்த வார நட்சத்திரக் கேள்வி எம்.எல்.ஏ. -க்கள் சம்பள உயர்வு பற்றி கேட்டவர் 60 வயது. தனியார் கம்பெனியில் சரியாக 35 வருஷம் உழைத்து ஓடாய் போனவர்.

“உண்மையிலேயே எனக்கு எம்.எல்.ஏ. -க்கள் சம்பளம் அதன் முறை பற்றி அவ்வளவு திருப்தி இல்லை

“மக்கள்தான் எஜமானர்கள். உங்களுக்கு உழைக்க உத்தரவிடுங்கள். வெயில் அடித்தால் செருப்பாய் உழைப்பேன். மழை பெய்தால் குடையாய் காப்பேன். வீட்டில் விறகாய் எரிவேன் என்றெல்லாம் டயலாக் விட்டுவிட்டு சம்பளம் முடிவு பண்ணுவது

மட்டும் எஜமானர்கள் இல்லை. நாங்களேதான் என்று சொல்வது ஒப்புக்கொள்ள முடியாத விஷயம்.

“உங்கள் கணக்குப்படி சராசரி இந்திய குடிமகனுக்கு என்ன வருமானமோ அதைப் போல் பத்து மடங்குக்கு மேல் இருக்கக்கூடாது. எம்.எல்.ஏ. . க்களுக்கு வேலை நிர்ணயம் வேண்டும். அவர்கள் சம்பளம் அடிப்படை மக்களின் பிரச்சினைகளை தீர்த்து வைத்ததின் அடிப்படையில் இருக்க வேண்டும்.

“ஒவ்வொரு எம்.எல்.ஏ. -வும் ஒவ்வொரு மாதமும் தொகுதியில் குறைந்தது 1000 மக்களை பார்க்க வேண்டும். அவர்கள் குறைளைக் கேட்டு வரிசைப்படுத்த வேண்டும். அதை எல்லோரும் பார்க்கும்படி நெட்டில் போடவேண்டும். அதில் எத்தனை மக்கள் பிரச்சினை களை தீர்த்து வைக்கப்பட்டது என்றுக் கணக்கு காட்டவேண்டும்

“20 லட்சம் மக்கள் பிரதிநிதி யாக ஒருவரை நிறுத்துகிறோம். அவர் அந்த தொகுதி மக்களின் குறைகளையும் பிரச்சினைகளையும் தீர்த்து வைக்கவேண்டும். இது அவருடைய முக்கியமான வேலை. இதற்காக அவரை எம்.எல்.ஏ. என்று சகல மரியாதையுடன் அழைத்து சம்பளம், சலுகை யெல்லாம் அரசாங்கம் மக்கள் வரிப் பணத்திலிருந்து வழங்குகிறது.

“ஆனால் வேடிக்கையை பாருங்கள். அவரால் நிக்கக்கூட முடியாது. அவர் நிக்கணும்னா இரண்டு பேராவது வேண்டும். நடக்கணும்னா நான்கு சக்கர நாற்காலி வேண்டும். சரியாய் பேச முடியாது அவரும் எந்த வித குற்ற உணர்ச்சியும் இன்றி எப்போதாவது நாலு பேர் உதவியுடன் ஒரு கையெழுத்து போட்டு எல்லா சலுகைகளையும் சரியாக வாங்கிடுவார்.

“இதில் யார் குற்றவாளி?

“அவர் மக்களுக்காக உழைப்பார் என்று அவரை தேர்தலில் நிக்க வைத்தவங்களா? இல்லை இவர் நமக்காக எதாவது செய்வார்

என்று நம்பி வோட்டு போட்டவங்களா? இல்லை நம்மால் இந்த நிலையிலும் மக்களுக்கு சேவை செய்ய முடியும் என்று நினைக்கிற அவரா? இல்லை எப்போவோ ஒருமுறை சபை பக்கம் வருவருக்கு எல்லா சலுகைகளையும் சம்பளமும் கொடுக்கும் அரசாங்க நிர்வாகமா? இல்லை. எல்லோரும் ஒட்டு மொத்தமாகவா? இதில் யார் ஜனநாயகத்தைக் கேலி செய்கிறார்கள்? இதில் யார் குற்றவாளி?”

அடுத்த கேள்வி: உங்கள் முயற்சி நல்லதாகவும் புதுமையாகவும் இருக்கு ஒரு டவுட் நீங்கள் எம்.எல்.ஏ. யாருக்கு கொடுப்பீர்கள் அனுபவம் உள்ளவர்களுக்கா? இல்லை புது முகங்களுக்கா? வாரிசு அரசியல் பற்றி உங்கள் கருத்தென்ன?

பதில்: “இரண்டு டேர்ம் மேலே யாருக்கும் கிடையாது. இரண்டாவது டேர்ம் கூட அவர் முதல் டேர்ம் பண்ணின செயல்பாடு அடிப்படையில் தான். இந்தியா பெரிய ஜனநாயக நாடு இதில் எத்தனையோ பேர்கள் திறமைசாலிகள்.. பொது வாழ்வில் தற்போது உள்ள நிலையில் அவர்களை ஒதுக்கி வைத்துவிட்டது. அவர்களுக்கு வாய்ப்பு கொடுப்போம். அடுத்ததாக வாரிசு அரசியல் கூடவே கூடாது தற்போது குத்தகை எடுத்த மாதிரி தலைவர், அவருக்கு பின் அவர் மகன் அவருக்கு வேண்டியவர்கள் அரசாங்க வேலைகள் காண்ட்ராக்ட் எடுத்துக்கொண்டு தொகுதிகளில் கட்டப்பஞ்சாயத்து செய்து ஜனநாயக அரசியல் என்ற போர்வையில் சம்பாதிக்கிறர்கள்.

“இப்போது எனக்கு பழைய தலைவரின் டயலாக் நினைவுக்கு வருகின்றது. அவரிடம் ஒரு எம்.எல்.ஏ. தன் பையனுக்கு ஒரு சீட் கேட்டாராம்

“தலைவர் கூலாக உங்கள் குடும்பம் நாட்டுக்கு மிகவும் உழைத்துவிட்டது. நீங்கள் நாட்டுக்காக 20 வருஷம் உழைத்துவிட்டீ ர்கள். உங்கள் குடும்பத்திலிருந்து நாடு இன்னும் தொண்டு கேட்டால் அது நியாயமாகாது. போறும் விட்டுவிடுங்கள் என்றாராம்.”

கேள்வி:- நீங்கள் கட்சி முறையை அழித்து விட பார்க்கிறீர்கள். கட்சி முறை ஏற்பட்டதின் காரணம் ஒரு திட்டம் வகுத்து நாட்டின் நலனை முன்னிறுத்தி மக்கள் மேம்பாட்டுக்காக செயல்பட வேண்டியதற்காக? கட்சி கட்டுபாடாக செயல் படுவதற்காக என்று எல்லோருக்கும் தெரியும்."

பதில்: இது மிகவும் நல்ல கேள்வி. எல்லா கட்சிகளும் நாட்டுக்கு உழைப்பதற்காகவும் மக்களின் வாழ்வை மேம்படுத்துவதற்க்காக பாடுபடுவதற்காகவும்தான் தொடங்கப்பட்டன. ஆனல் நடைமுறையில் என்ன ஆயிற்று? தலைவர்கள் தங்கள் மேம்பாட்டுக்கவும் தங்களின் கூட்டத்தார் (ஜாதியாக இருக்கலாம், ஊராக இருக்கலாம்) பயன் பெறுவதற்கும் அரசாங்க எந்திரங்களை உபயோகப்படுத்திக்கொண்டார்கள். பேர் தான் ஜனநாயகம்

இந்த சமயத்தில் ஒரு கதை ஒன்று இங்கு பொருத்தமாக இருக்கும்.

வெகு காலத்துக்கு முன்பு அரபு நாடுகளில் ஒரு பழக்கமும் நம்பிக்கையும் இருந்தது. எல்லா மக்களும் ஒரு குறிப்பிட்ட நாளில் ஒரு மலையின் முன்னால் சென்று "என்னை என் கணவர் தவிர யாரும் தீண்டவில்லை" என்று உரக்க சொல்லவேண்டும். யார் பொய் சொல்கிறார்களோ அவர்களை அந்த மலை விழுங்கிவிடுமாம்.

எல்லோரும் நம்பினார்கள் பயந்தார்கள்.

ஒரு பெண் கணவனை தவிர இன்னொருவருடனும் தொடர்பு கொண்டிருந்தாள். குறிப்பிட்ட நாள் நெருங்கியதும் அவள் பயந்தாள்.

உறவு வைத்தியிருந்தவன் ஒரு சூப்பர் ஐடியா சொன்னான்.

"மலைக்கு போவதற்காக ஒரு ஒட்டகம் ஏற்பாடு செய் நான் அதை பிடித்துக்கொண்டு வருகிறேன் நீ அதில் இருந்து விழுவதுபோல் நடி நான் உன்னை தூக்கிவிடுகிறேன்

"நீ மலைக்கு முன்னால் சென்று "என்னை என் கணவர் மற்றும் இந்த ஒட்டகக்காரனையும் தவிர யாரும் தீண்டவில்லை "என்று உரக்க சொல்."

அவள் அப்படியே சொன்னாள்.

மலை ஒரு பெரிய குலுங்கலுடன் நொறுங்கியது

“ஜனநாயகம் என்றால் மக்களால் தேர்தெடுக்கப்பட்டவர்களால் ஆட்சி நடக்கவேண்டும் நம் ஜனநாயகமும் இது மாதிரி மக்களால் தேர்தெடுக்கப்பட்டவர்களால் ஆட்சிநடக்கிறது. மக்களை ஓட்டு போட வைக்கவேண்டும். அவ்வளவு தானே. சிலரை குடிக்கவைத்து ஓட்டு போட வைக்கலாம். சிலருக்கு காசு பரிசு குடுத்து ஓட்டு போட வைக்கலாம் . சிலரை பயமுறுத்தி ஓட்டு போட வைக்கலாம். சிலரை பயமுறுத்தி ஓட்டு போடாமல் வைக்கலாம். ஜனநாயகத்தின் அடிப்படை. அதாவது மக்கள் வோட்டு வாங்கி பதவியில் உட்கார்ந்து விட்டார்கள்.

“ஆனால் ஜனநாயக முறைப்படியே மக்கள் ரெப்ரெசென்டடிவ் என்பது போய் தலைவர் ரெப்ரெசென்டடிவ் என்று ஆக்கிவிட்டார்கள். நம் மக்களும் ஜனநாயக முறைப்படி இரண்டு கட்சிகளுக்கு மாற்றி மாற்றி ஒட்டு போட்டு தேர்ந்தடுக்கிறது இதை கண்டும் காணாதது போல் அரசியல் செய்கிறார்கள்

“கட்சியை குடும்ப சொத்தாக மாற்றுவதும் அதற்கு உரிமை கொண்டாடி வாரிசுகள் சண்டை இடுவதையும் ஜனநாயகம் ஏற்றுக்கொள்ளாது. கட்சியில் இந்த மாதிரி இனிமேல் நடக்காத்திருக்க அரசியலில் மாற்றங்கள் கொண்டு வரவேண்டும்.

இன்னொரு கேள்வி: “மேல் சபை ராஜ்ய சபா பற்றி உங்கள் கருத்து என்ன?

பதில் : ஜன நாயகத்தில் ராஜ்ய சபா என்று ஒன்று உண்டு. மக்களை சந்தித்து தேர்தலில் நின்று வெற்றி பெற முடியாதவர்கள் அறிவு ஜீவிகள். இவர்களின் அறிவும் அனுபவமும் நாட்டுக்கு பயன்படவேண்டும் என்ற நல்ல எண்ணத்தில் இவர்களுக்கு சீட் தரப்பட்டது. ஆனால் நடந்தது என்ன? அறிவு ஜீவிகள் வரவில்லை. தேர்தலில் சீட் கிடைக்காதவர்கள், அதிகார வட்ட ஜால்ராக்கள் மற்றும்

கட்சியை நடத்துவதில் பதட்டம் ஏற்படுத்துபவர்கள் இவர்களுக்கு சீட்டும் மற்றும் கூட்டணி கட்சிகளை சந்தோஷப்படுத்தும் பேரத்தில் ஈடுபடுவதற்கும் ராஜ்ய சபா சீட் பயன்படுத்தப்படுகிறது . கிரிக்கெட் வீரர், நடிகைகள் இவர்களுக்கு அதன் மூலம் வோட்டு விழும் என்ற எண்ணத்தில் கொடுக்கப்படுகிறது.

கேள்வி: “நீங்கள் சொல்வது தான் நடக்கிறது. இது எல்லோருக்கும் தெரியும். அரசியல் வாதிகள் வாயைத் திறக்கமாட்டார்கள் ஏனன்றால் அது அவர்களைப் பாதிக்கும். கவர்மெண்ட்டுக்கு அதிகாரம் கிடையாது. அதிகாரிகளுக்கு இதில் சம்பந்தம் கிடையாதுபோல் போய்க்கொண்டிருக்கிறார்கள். மக்கள் வழிதெரியாமல் முழித்துக் கொண்டிருக்கிறார்கள். இதற்கு எதாவது வழி இருக்கிறதா?”

பதில் : இருக்கிறது. நான் அடுத்தவாரம் இது பற்றி விளக்குவேன்.

தேர்தல் அறிவித்துவிட்டதால் இந்த மாதிரி கருத்துக்களுக்கு தடை செய்யவேண்டும் என்றும் இந்த சீரியலை தடைசெய்யவேண்டும் என்றும் கோர்ட்டில் மனு செய்து இருக்கிறார் பெயர் சொல்லவிரும்பாத அரசியல் தலைவர். அவர் இந்த பெடிஷனை அவசர பெடிஷனாக விசாரணைக்கு எடுத்துக்கொள்ளவேண்டும் என்றும் கேட்டுஇருந்தார்

நீதிபதியும் இதை அவசர கேஸாக எடுத்துக்கொண்டார். நீதிபதி கருத்து சுதந்திரம் மிக்க நம் ஜனநாயக நாட்டில் ஒரு சிந்தனைக்கு தடை என்பது பாதகமானது. புதியசிந்தனைகளும் கருத்துக்களும் வரவேற்கப்படவேண்டியவை ஆனாலும் இந்த புதிய சிந்தனை எலெக்ஷன் சமயத்தில் படித்த மக்களை வெகுவாக குழப்பிவிடும் என்ற வாதம் ஓரளவுக்கு நடைமுறைக்கு ஏற்புடைய தாய் இருக்கின்றது கருத்து சுதந்திரத்தை ஜனநாயக ரீதியில் காப்பாத்தவேண்டிய பொறுப்பு நீதித்துறைக்கு இருந்தபோதிலும் தற்போதய தேர்தல் நிலவரத்தை முக்கியமானதாக எடுத்துக்கொண்டு எதிர் தரப்பில்

அப்படி குழப்புவதற்கு வாய்ப்பே இல்லை என்ற வாதத்திற்கு சரியான போதுமான வலுவான ஆதாரங்கள் வைக்காததினாலும் எலெக்ஷன் மிக சமீபத்தில் வருவதாலும் இந்த புதிய சிந்தனையை சரியாக புரிய காலம் தேவைப்படுவதாலும் தேர்தல் முடிவு வரை இந்த சிந்தனைக்கு தடை விதிக்கின்றேன் தொடர் தொடரவேண்டில் தேர்தல் முடிந்தவுடன் எவ்வித நிபந்தனையும் இன்றி தொடரலாம் என்று இந்த நீதிமன்றம் உத்திரவிடுகிறது மேலும் தேர்தல் நெருங்குவதை ஒட்டி இந்த தீர்ப்புக்கு மேல்முறையீடோ அப்பீலோ செய்யவேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறது

“நீதி மன்ற ஆணைக்கேற்ப தொடர் தற்காலிகமாக நிறுத்தப்படுகிறது தேர்தல் முடிந்ததும் தொடரும். ஆதரவு அளித்த வாசகர்களுக்கு நன்றி. தொடர்ந்து உங்களின் பேராதரவை வேண்டுகிறேன். வாசகர்களுக்கு மீண்டும் நன்றி.”- எடிட்டர்

நடிகர் தலைவராகி விட்டதால் அவர் நிலத்துக்கு பாதுகாப்புக் கிடைத்துவிட்டது. நடிகருக்கு மக்கள் மனதில் ஒரு தாக்கத்தை ஏற்படுத்தியதாக நினைத்தார்.

அவரது ஒரு தீவிர ரசிகர் உச்சநீதி மன்றத்தில் ஒரு பொதுநலவழக்கு தொடுத்தார். நடிகர் கட்சிக்கு தொடர்ந்து எழுதவும் அவருடைய கட்சியை தேர்தலில் போட்டியிடவும் வசதியாக சென்னை நீதி மன்றம் போட்ட தடையை நீக்கவும் மக்களின் பேச்சு கருத்து சுதந்திரத்தை பாதுகாக்கவேண்டும் என்று மனு செய்திருந்தார். இதை மிக அவசர கேஸாக எடுத்துக்கொள்ளவும் விண்ணப்பித்து இருந்தார்.

கேஸுக்கு நம்பர் ஆனவுடன் ரசிகர்கள் நடிகர் வீட்டுக்கு முன்னால் கூடி அவரை அரசியலுக்கு வரத்தான் வேண்டும். அவர் ஒருவரால் மட்டும் தான் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தமுடியும் என்று போராட ஆரம்பித்தார்கள்.

நடிகரும் வெளியில் வந்து தன் மீது மக்கள் வைத்திருக்கும் நம்பிக்கைக்கு நன்றி தெரிவித்து தன்னை வாழவைத்த மக்களுக்கு

தன்னால் முடிந்த பணியை நிச்சயம் செய்வேன் என்று சொல்லி சரியான காலத்தில் வருவதாகவும் இப்போது மக்கள் அனாவசியமாக கூட்டம் போட்டு மக்களுக்கும் போக்குவரத்துக்கும் இடையூறு செய்யவேண்டாம் என்று மக்களிடம் விடை பெற்று கொண்டார்.

மக்களும் தலைவருக்கு ஜே வெற்றி நமதே கோஷத்துடன் கலைந்து சென்றார்கள்.

.

## அவர்கள் வேறே ஜாதி

தமிழ்நாட்டில் உள்ள பிரபலமான ‘டி.வி சானல்’

சண்முகம் நேர்காணலுக்கு வந்திருக்கிறான்.

அதிகாரி : என்னப்பா படிச்சிருக்கே?

சண்முகம் : +2 சார்

அதிகாரி : +2 படிச்ச நீ எதை நம்பி என்ன போஸ்டுக்காக இன்டர்வியூக்கு வந்திருக்கே?

சண்முகம் : என்ன போஸ்டு வேணுமானாலும் கொடுங்க.

அதிகாரி : நாங்க உன்னை எதுக்குக் கூப்பிட்டோம் தெரியுமா?

சண்முகம் : தெரியாது சார்.

அதிகாரி : நீ தினமும் டி.விலே எதையாவது சாதிக்க விரும்புகிறேன் எனக்குச், சான்ஸ் கொடுங்க கேட்டு இது வரை ஒரு மாதமா 30 கடிதம் தொடர்ந்து எழுதிக் கொண்டிருக்கே. எங்க சேர்மன் கையில் ஒரு நாள் இந்த கடிதம் தற்செயலாகக் கிடைத்தது. கடிதத்தில் கடிதம் எண். 20 என்று போட்டிருந்தது. அவர் விசாரித்து உன்னைக் கூப்பிட்டு பேசச் சொல்லி இருக்கிறார்.

சண்முகம் : நன்றி சார். நான் அதிர்ஷடக்காரன். ஒருநாள் ஷேக்ஸ்பியர் பற்றி படித்தேன். அவர் படிக்காமல் குதிரையை பார்த்துக் கொண்டிருந்தவர்தான். அவர் மாதிரி நானும் முயற்சி செய்யணும்னு நினைச்சேன். என்னுடைய வசதிக்கு தினமும் கடிதம் எழுதலாம் என்று எண்ணினேன்.

அதிகாரி : குட் லக் பாய். இன்டரஸ்டிங் டூ.. சரி நான் என்ன சொல்லணும்

**அரசியலா..?**

சண்முகம் : புரோகிராம்பண்றவங்க கூடச் சேர்த்துவிடுங்கள்.

அதிகாரி : (சிரித்துக் கொண்டே) சரி நீ அங்கே என்ன பண்ணுவே.

சண்முகம் : நான் கத்துப்பேன் சார். முதலில் நல்லாக் கத்துக்கிட்டாதான் நான் ஐடியா பண்ண முடியும்.

அதிகாரி : குட். . நான் சொல்றேன். ஆனால் இன்னொரு தடவை எனக்கு மேலே உள்ள பெரிய அதிகாரி பார்க்க வேண்டும்

சண்முகம் : சரி சார், ரொம்ப தேங்க்ஸ் சார். இப்பவே பார்த்திடலாமா?

அதிகாரி : அவர் வெளிநாட்டுக்குப் போய் இருக்கிறார் வருவதற்கு நான்கு நாட்கள் ஆகும். நீ அவரைப் பார்க்கக் குறைந்தது ஐந்து நாள் ஆகும். ஊருக்குப் போய் வருவதானால் போய்விட்டு வா.

சண்முகம் : வேணாம் சார். ஒரே வேலையா நான் இருந்துட்டு 5 நாட்களுக்குப் பிறகு உங்களுக்கு போன் பண்றேன். தயவு செய்து நீங்கள் அவர் வந்தவுடன் இன்டர்வியூக்கு ஏற்பாடு பண்ணி உதவுங்க.

அதிகாரி : சரி, நீ போய் வா. உனக்கு எனது வாழ்த்துக்கள்.

சென்னையில் கடற்கரை, எழும்பூர் மியூசியம், வண்டலூர் ஜூ, மயிலாப்பூர் கோயில், மகாபலிபுரம் எல்லாம் சுற்றிப் பார்க்க நாலு நாள் போதுமானதாக இருந்தது. டிவி சானலுக்கு ஆபிஸர் கொடுத்த நம்பருக்குப் போன் செய்தான்.

“வணக்கம் சார். நான் சண்முகம் பேசுகிறேன். உங்க மேலதிகாரி வந்துவிட்டாரா? உங்களால் இன்டர்வியூக்கு ஏற்பாடு பண்ண முடிந்ததா?” என்று கேட்டான்

“சண்முகம் நீ அதிர்ஷ்டக்காரன். நான் அவரிடம் சொன்னவுடன் நாளையே உன்னைச் சந்திக்க நேரம் கொடுத்துவிட்டார். மதியம் 3.30 மணிக்குச் சொல்லி இருக்கிறார். அவருக்கு நேரம் ரொம்ப முக்கியம் 3.00 மணிக்கே வந்து விடு. நேரத்தைச் சரியாகக் கடைப்பிடிப்பவர்களை அவருக்கு ரொம்பப் பிடிக்கும்.” என்றார் அதிகாரி

2.45க்கு ஆஜரானான். வரவேற்பறையில் உட்காரச் சொன்னார்கள். தண்ணீர் கொடுத்தார்கள். டீயா, காபியா என்று கேட்டார்கள். கையில் சில்லரை எவ்வளவு தேறும் என்று எண்ணிப் பார்த்தான். 20 ரூபாய் இருந்தது. அதற்கு மேல் கேட்க மாட்டார்கள். திரும்பிப் போகும் போது நடந்து கூட போயிடலாம். அவங்க மறுபடியும் டீயா, காபியா என்று கேட்கும் போது ஏதாவது சொல்ல வேண்டும் என்று நினைத்து “டீ” என்றான்.

ஒரு ட்ரேயில் கப்பில் டீ வைத்து ஒருவன் கொடுத்தான். டீ குடித்து கீழே வைத்த கப்பை ஒருவன் எடுத்துப்போனான். டீயை விட அவன் காசு எதுவும் கேட்காமல் போனது ரொம்ப மகிழ்ச்சியாய் இருந்தது.

சார் உங்களை கூப்பிடுகிறார். உள்ளே போங்கள் என்றான் ஒருவன். விசாலமான அறை. ‘ஏஸி’ குளிரவே செய்தது. அங்கிருந்த சேரில் உட்கார ஒரு மாதிரி கூச்சமாய் இருந்தது.

சேர்மன் : உட்காரப்பா.

சேரின் விளிம்பில் உட்கார்ந்தான். அந்த ‘ஏஸி’யிலும் உடம்பு வியர்த்தது.

சேர்மன்: என்னப்பா டி.வியிலே சாதனை பண்ணனும்னு ஆசையா?

சிறு புன்முறுவலுடன் கேள்வி வந்தது.

**அரசியலா..?**

சண்முகம் : "ஆமா சார்" ஆசையா இருந்தது. முயற்சி பண்ணறதை பெரிய டி.வியிலே பண்ணலாம்னு உங்களுக்கு எழுதினேன்.

சேர்மன் : உன் கையெழுத்து ரொம்ப அழகாக இருந்தது உன்னை முதலில் இன்டர்வியூ செய்தவரும் உன்னைப் பற்றி நல்லதாகவே சொன்னார். முதலில் சேரும்போது பூனைபோல் இருந்துவிட்டு, அப்புறம் யூனியன், அது இதுன்னிட்டு வேலையை நிறுத்தறது, கொடி பிடிக்கிறது எல்லாம் கூடாது.

சண்முகம் : சார். நான் அப்படிப்பட்ட ஆள் இல்லை விசுவாசமாக நடந்து கொள்வேன். நான் டிவியில் ஏதாவது சாதிக்கணும்னு இருக்கேன்

சேர்மன்: குட், நல்லா இருந்தா முன்னுக்கு வரலாம்.

சண்முகம் ஐயா, நான் எப்போ சேரலாம்?

சேர்மன்: நீ நாளைக்கு அதிகாரி கிட்ட பேசு. அவர் சொல்வார்

சண்முகம் : சரிங்க ஐயா நான் வருகிறேன்

மறுநாள் அதிகாரிகிட்ட பேசினான். அவர் அடுத்த நாளே சேரலாம் என்று சொல்லிவிட்டார் நீ நாளை காலை 9. மணிக்கு வந்து என்னைப் பார் அதிகாரி சொல்லிட்டார்.

சேர்மன் : என்னப்பா பையன் எப்படி? நீ என்ன நினைக்கிறே- அதிகாரிகிட்ட கேட்டார்.

அதிகாரி: கிராமத்து பையன். உங்க வீட்டில வேலை செய்யற பீஹார் பையன் வேறு ஊருக்கு போயிடப்போறான். இங்கு வேலை செய்ய பயமா இருக்குன்னு ஒரு மாதமா கேட்டுக்கிட்டு இருக்கான். இவனை கொஞ்சம் 'டெஸ்ட்'

பண்ணிட்டு உங்க வீட்டிலே வைச்சுடலாம் என்று யோசனை செய்கிறேன். அதனால்தான் உங்களையும் பார்த்துப் பேசச் சொன்னேன். நீங்கள் பார்த்து எடை போட்ட மாதிரி இருக்கும்.

சேர்மன் :நானும் பார்த்தேன். பையன் துடிப்பாய் இருக்கான் சின்ன வயது சீக்கிரம் பிக் அப் பண்ணிக்கலாம். ஏழைப் பையன். அதிகம் படிக்காதவன். ரொம்ப ரூல்ஸ் பேசமாட்டான். நீ சொல்ற மாதிரி வீட்டுக்கும் உபயோகப் படுத்திக்கலாம். இந்த சம்பளத்தில் இரண்டு வேலைக்கும் ஆள் கிடைக்க மாட்டாங்க. நாளைக்கு பக்குவமாய் பேசி முடிச்சிடு.

9.00 மணிக்கு சரியாய் போய் வரவேற்பறையில் உட்கார்ந்தான். இந்த தடவை காபியை ஆர்டர் பண்ணினான். 9.30 மணிக்கு அழைப்பு வந்தவுடன் வணக்கம் சார் சொல்லி உள்ளே நுழைந்தான்.

அதிகாரி : என்னப்பா சேர்மன் உனக்கு ஒரு வாய்ப்புக் கொடுத்துப் பார்க்கலாம் என்று சொன்னார்.

சண்முகம் : ரொம்ப தேங்க்ஸ் சார். உங்களாலேயே தான் கிடைத்தது உங்களுக்கு எப்பவும் விசுவாசமாக இருப்பேன்.

அதிகாரி : நானும் தேனி பக்கத்தில் இருந்து தான் வருகிறேன் நானும் அதிகம் படிக்கவில்லை என்னுடைய வேலையையும் விசுவாசத்தையும் பார்த்து தேனி பக்கத்தில் இருந்து வர்றவங்களை நம்புகிறார். நீயும் அதுமாதிரி விசுவாசமும் நாணயமும் காண்பித்தால் நம் பக்கத்து ஜனங்களுக்கு வேலைவாய்ப்பு சந்தர்ப்பம் கிடைக்கும். சார் சொல்வார். தொழிலை கற்றுக் கொள்ளலாம். கற்றுக் கொடுத்து விடலாம். ஆனால் விசுவாசமும் நாணயமும் இயற்கையிலேயே வரணும். நீ நல்லபடியா நடந்து கொண்டால் உனக்கு சரியான எதிர்காலம் உண்டு. நல்ல

முறையில் உயரலாம். அவர் என்ன வேலை சொன்னாலும் செய். அவரே என்ன வேலை உனக்கு Suitஆகும்னு முடிவு செய்வார். அதுக்கு முன்னே உனக்கு எல்லா வேலையும் சொல்லித் தருவார். நீ முந்திரிக்கொட்டை மாதிரி டிவியிலே இதைப் பண்றேன் அது பண்றேன் என்று அதிகம் ஆர்வம் காட்டாதே. ஆனால் எந்த வேலை சொன்னாலும் அதை ஆர்வத்தோடு செய். உனக்கு வாழ்த்துக்கள் உனக்கு இப்போது வாட்ச்மேன் கூட வேலை. யார் யார் வராங்க அவர்களை எப்படி வரவேற்கணும் எல்லாம் கத்துக்கிடணும். உனக்கு யூனிபார்ம் தைக்க அளவு கொடுத்துடு.

[இரண்டு மூன்று நாள் சென்றிருக்கும். அன்று செக்யூரிட்டி வேலை பார்ப்பவர் வரவில்லை சண்முகம் மட்டும்தான் வேலைக்கு விரவங்களை பதிவு செய்து கார் நம்பர் குறித்து ஒழுங்காக வேலை செய்து வந்தான். சேர்மன் கார் வந்தவுடன் கேட் திறந்து பெரிய சல்யூட் ஒன்று வைத்தான். ]

சேர்மன் : என்னப்பா எப்படி வேலை செய்யறே?

சண்முகம் : நல்லா செய்றேன் சார்

சேர்மன் : வா ரெக்கார்ட் பார்க்கலாம்

[என்று அவன் டேபிளுக்கு சென்றார். கார் நம்பர், பெயர், வந்த நேரம், விசிட்டர்-பாஸ் நம்பர், போன நேரம் சரியாகக் குவித்து வைத்திருந்தான்]

சேர்மன் : ‘குட்.’.

சண்முகம் : சார், ஒரு சின்ன கையெழுத்து போட்டால் எனக்குப் பெருமையாக இருக்கும்

சேர்மன் : அப்படியா ‘குட்’..

[ஒரு இனிஷியல் போட்டார். ]

அதிகாரிக்குப் போன் பண்ணினான் சேர்மன் சார் வந்திருந்தது பற்றி சொன்னான். வேறு யாரும் வரவில்லை என்றும் டேபிளில் ஒரு கவர் கிடந்ததாகவும் அதைப் பிரித்துப் பார்த்தபோது 2000 ரூபாய் நோட்டு ஒன்று இருந்ததாகவும் வேறுயாரும் பதினைந்து நிமிடங்களாக வரவில்லை என்றும் சேர்மன் சார் உள்ளே வந்து ரெக்கார்ட்ஸ் பார்த்ததாகவும் அவர் மறதியாய் அந்தக் கவரை விட்டு இருக்கலாம் என்றும், தற்போது நான் ஒருவன் மட்டும் இருப்பதால் கேட்டை விட்டு விட்டு வருவது சரியல்ல என்றும், யாரையாவது அனுப்பி அதை வாங்கி சேர்மன் இடம் சேர்ப்பித்து விடலாம் என்றும் சொன்னான்.

அதிகாரி: வெரி குட். சேர்மன் சாரிடம் கேட்டு விடுகிறேன். அந்தக் கவரை நானே வந்து வாங்கிக் கொள்கிறேன். கவனமாக வைத்துக் கொள். அதிகாரி வந்து கவரை வாங்கிக் கொண்டு கவர் கொடுத்தது நல்ல விஷயம்தான் என்றாலும் கவரைப் பிரித்துப் பார்த்தது சரியில்லை என்றும் அவனுக்கு அறிவுரை சொன்னார்.

‘கவர் கிடக்கிறதே, அதில் மேலே எந்த விலாசமும் இல்லையே, யாரிடம் கொடுப்பது என்று தெரிந்து கொள்வதற்காகவே பிரித்துப் பார்த்தேன்’ என்று சண்முகம் சொன்னான்.

‘கவர் இருந்தால் அப்படியே கவர் என்று எழுதி ஒரு பெரிய கவரில் போட்டு வைத்து விட வேண்டும். கவரை விட்டவர் வந்து வாங்கிக் கொள்வார். அப்படி யாரும் வரவில்லை என்றால் அடுத்த நாள் ஆபிசில் கொடுக்க வேண்டும்.’

அதிகாரி சேர்மன் இடம் கவர் கொடுத்து விஷயம் சொன்னபோது சேர்மன் செக் பண்ணுவதற்காகவே அந்தக் கவரை விட்டு வந்ததாகச் சொன்னார். சண்முகம் அவரிடம் கையெழுத்து வாங்கியதைப் பாராட்டிச் சொன்னார்.

இரண்டு மாதம் அப்படியே ஓடியது. செக்யூரிட்டி வேலை பார்த்த பிறகு டெஸ்பாட்ச் செக்ஷனில் போட்டிருந்தார்கள் ஒரு நாள் சேர்மன் சண்முகத்தைக் கூப்பிட்டு ஒரு வேலையா வேலூர் போக வேண்டும். கூட வா என்றார். போகும்போது சண்முகம் சேர்மன் டிரைவரிடமும், தன்னிடமும் சகஜமாவும் தாராளமாகவும் பேசி வந்தது அவரிடம் மரியாதையைக் கூட்டியது வழியில் நிறுத்தி இளநீர் சாப்பிட்டார். டிரைவர், சண்முகத்துக்கும் கிடைத்தது. சாப்பிட டிரைவரிடம் 200 ரூபாய் கொடுத்து பழங்கள் வாங்கி வரச்சொன்னார்.

'நம்ம கம்பெனி டைரக்டர் முருகேஷீடன் பேசி இருக்கிறாயா?' திடீரென கேட்டார் சேர்மன் .

'பேசி இருக்கேன். ஆனால் ரொம்ப ரொம்ப குறைவா பேசி இருக்கேன்.'

'சரி அவர்கிட்டே ஜாக்கிரதையாகவே இரு. என்னை மாதிரி இல்லை அவர் எதிலும் எப்போதும் எல்லோரிடமும் குறை கண்டுபிடிக்கும் குணம். உள்ளவர் அவர் பண விஷயத்திலும் சரி இல்லை. மொத்தத்தில் அவரைக் கழட்டி விட டைம் பார்த்துகிட்டு இருக்கேன். இதுபற்றி எதுவும் யாரிடமும் பேச வேண்டாம். டிரைவருக்கும் இது தெரிய வேண்டாம். அதனால்தான் அவரை ஒரு வேலை சொல்லி அனுப்பி இருக்கிறேன்.'

வேலூர் ட்ரிப் ஒரு மாதிரி முடிந்துவிட்டது. சண்முகத்திற்கு ஒன்றும் புரியவில்லை. இருக்கிறது இரண்டு முதலாளிகள். ஒரு முதலாளி இன்னொரு முதலாளி சரியில்லை என்று சொல்கிறார். ஒரு நாளைக்குப் பெரிசா வெடிக்க வாய்ப்பு இருக்கு. அப்போது நான் என்ன செய்யனும்? ஒண்ணும் புரியவில்லை. அது சரி வரும்போது பார்த்துக்கொள்ளலாம்.

சண்முகம் பல டிபார்ட்மெண்ட் பார்த்து ப்ரொடக்ஷன் டிபார்ட்மென்ட் வந்து இரண்டு மாதம் ஆயிற்று ஒருநாள் சேர்மன்

சண்முகத்தை கூப்பிட்டு, “சண்முகம் நீ எங்கே தங்கி இருக்கே?” என்று கேட்டார்

“நான் நுங்கம்பாக்கத்தில் ஒரு ‘லாட்ஜ்’ல தங்கி இருக்கேன்.”

“என் வீட்டிலே பீஹார் பையன் காலி பண்ணப் போறான். அவன் ரூம் காலியாகிறது. அங்கே நீ தங்கி கொள்ளலாம். வாடகை என்று ஏதும் கொடுக்க வேண்டியதில்லை. ஆனால் ஆபீஸ் வேலை முடிந்த பின்பு வீட்டு வேலை சின்ன சின்னதா செய்ய வேண்டி இருக்கும். உனக்கு சம்மதம்னா அடுத்த வாரமே வரலாம்.”

“சரி சார் உங்க வீட்டுக்கு வரதுன்னா எனக்கு ரொம்ப சந்தோஷம்.

“ சண்முகம் உனக்கு டிரைவிங் சொல்லித் தரப் போகிறேன்.”

“சார், எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியல்லே.”

டிரைவிங் லைசன்ஸ் எடுத்து வீட்டு வேலைக்கு கார் ஓட்டவும் பழக்கப்படுத்தினார்.

“சண்முகம், நல்லா வேலை செய்யறே. கொஞ்சம் ஐடியாவும் இருக்கு ஆனால் என்னதான் இருந்தாலும் நீ ‘ப்ரொபஷனல் க்வாலிஃபைடு’ இல்லை அது உன் முன்னேற்றத்தை பாதிக்கும்”.

“சரி சார் நீங்க என்ன சொல்றீங்களோ என்ன செய்கிறீர்களோ அது எனக்கு நல்லதுதான். என்னை கேட்கவே வேணாம் சார் எனக்காக நீங்க என்ன பண்ணினாலும் சம்மதம்தான்.”

வேகமாக காரியங்கள் நடந்தன. சண்முகம் ஈவினிங் காலேஜ்ல சேர்ந்து 3 மாதத்தில் ஒரு டிப்ளமோ இன் விஸ்காம் வாங்கிவிட்டான். விஸ்காம் முடித்தவுடன் சண்முகம் தொழிலில் ஈடுபாடும் ஆர்வமும் கூடியது.

நாட்கள் ஓடின ஊருக்கு போய் தான் நல்ல நிலைமையில் இருப்பதை வீட்டில் சொல்ல ஆசைப்பட்டான். ஊரில் டிவி யில்

வேலை பார்க்கும் இவனை பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். அப்பா அம்மாவுக்கு பையனின் வளர்ச்சியில் பெருமை பிடிபடவில்லை, தற்செயலாக பழைய ஸ்கூல் மேட் ஒருவனை பார்த்தான்.

“டே நீ சண்முகம் இல்லே?”

“ஆமாம் நீ வேலு தானே? நீ சென்னையில் ஏதோ கல்லூரியில் பெரிசா படிக்கிறதா சொன்னார்கள் இப்போ என்ன பண்ணறே?”

ஆமாம் நான் விஸ்காம் இல் மாஸ்டர்ஸ் பண்ணிட்டேன் வேலைதான் சரியாய் கிடைக்கவில்லை

அப்படியா. நான் ஒன்னு சொல்வேன். தப்பா எடுத்துக்காதே.

தப்பா என்ன சொல்லப் போறே. நீ என்ன வேணாலும் சொல்லு

நான் டிவி லே தான் வேலை செய்யறேன்

எனக்கு தெரியும் உன்கிட்டே எனக்கு ஏதாவது வேலை கிடைக்குமா என்று கேக்கத்தான் வந்தேன்.

எனக்கு ஒரு உதவியாளர் வேலை காலியாய் இருக்கு நான் சொன்னால் முதலாளி உனக்குப் போடுவார்.

ரொம்ப தேங்க்ஸ் நான் உனக்கு மிகவும் கடமை பட்டுஇருக்கேன்

ஆனால் ஒண்ணு நீ ஜாஸ்தி படிச்சிருக்கே எனக்கு உதவியாளாரா சேருவியா? உனக்கு ஒன்றும் கஷ்டம் இல்லேயே?

வேலு :இல்லை. நீ சின்ன ஹெல்ப் பண்ணனும். ஊரிலே நான் தான் நிறைய படிச்சிருக்கேன் என்று நினைத்துக்கொண்டு இருக்கிறாங்க நான் உன்னைவிட பெரிய போஸ்டில் இருக்கிறதா சொல்லணும்.

சண்முகம் :இது தானே? கவலையை விடு பாஸ்

**எஸ். வெங்கட்ராமன்**

சண்முகம் இவ்வளவு நல்லவனா? ஊரிலே அதனாலே ஊரிலே மட்டும் நீ எங்கிட்ட வேலை செய்யறதா சொல்லிக்குவேன் என்ற உடனே "சரி பாஸ்" என்றானே கொஞ்சம்கூட தயக்கம் இல்லை. முகத்தில் கலவரமில்லை என்ன உதவி செய்தவனிடம் இந்த மாதிரி கேட்கிறானே ஊஹூம் ஒரு சிறு மாற்றம்கூட முகத்திலோ கண்களிலோ காணவில்லை இந்தமாதிரி நண்பன் யாருக்கு கிடைக்கும் இத்தனைக்கும் படிக்கும் போது அவ்வளவு நெருக்கம் கூட கிடையாது

வேலுவும் வேளையில் செந்துவிட்டான்.

டைரக்டர், "சண்முகம், நீ இவனை கொண்டு வந்திருக்கே நல்லபடியாய் தயார் செய்யவேண்டும். உனக்கு உதவிக்கு வைத்துக்கொள். வேலை படிக்கட்டும்." என்று சொன்னார்.

வேலையின் போது சண்முகம் யாரிடமும் அதிகமாக பேசமாட்டான். நாட்கள் நகர்ந்தன

ஒரு நாள். சேர்மன் எல்லாரையும் கூப்பிட்டு "இப்போ விளம்பரங்கள் வருவது ரொம்ப குறைஞ்சிட்டு வர்ரது. நாம ஏதாவது செய்து அட்வர்டைஸ்மென்ட் இம்ப்ரூவ்மென்ட் பண்ணனும். நீங்க எல்லாம் ஏதாவது ஐடியா கொடுத்தால் பரிசீலிக்கப்படும்." என்று யோசனை கேட்டார்

எல்லோரும் மௌனம் காத்தார்கள்.

"சண்முகம்.. நீ தான் எதாவது சாதிக்கணும்னு வந்திருக்கே சொல்லு எதாவது ஐடியா இருக்கா இருந்தா சொல்லலாம் ஏதாவது ஐடியா இருக்கா?" சேர்மன் ஸ்பெஷலாக விசாரித்தார்.

சண்முகம் தலையை இல்லை என்று அசைத்தான்.

இரவு வீட்டுக்கு வந்து "சார் உங்ககிட்ட பத்து நிமிஷம் பேசலாமா" என்றான் சண்முகம்.

“பேசலாம்பா. நான் உன்னிடம் ஏதாவது புதிய சிந்தனை வரும் என்று எதிர்பார்த்தேன்.”

“நான் அங்கே பேசினால் அது பல விவாதங்களுக்கு வழிவகுக்கும். விவாதங்கள் என்று வந்தாலே விருப்பு வெறுப்பு கூட வரும். ஒரு மனதாக செயலாற்றும் செயல் திறன் இன்றி நீர்த்துப் போய்விடும்.”

“சரி உனக்கு ஏதாவது ஐடியா இருக்கா?”

“மக்களுக்கு டிவியின் கவர்ச்சி குறைந்து கொண்டு வருகிறது. ஓயாமல் கட்டுரைகளும், பிரசங்கங்களும் டிவி சீரியல்களில் வரும் எதிர்மறைக் கருத்துகளையும், அவற்றின் தாக்கத்தையும் விமர்சித்து, வயதானவர்களையும், பொழுது போகாதவர்களையும் தவிர்த்து மற்றவர்களை ரசிக்க விடாமல் செய்துவிட்டது. வயதானவர்கள், பொழுது போகாதவர்கள் வாங்கும் திறன் மிகவும் குறைவு. வாங்கும் திறன் குறைந்தவர்களுக்கு மத்தியில் பொருட்களை விளம்பரப்படுத்தினால் என்ன பயன்? சினிமாவும் இப்போது கவர்ச்சியை இழந்து விட்டது. 2 மணி நேர சினிமாவை விளம்பரத்தோடு 4 மணி நேரம் பார்க்கும் பொறுமை மக்களிடம் போய் விட்டது. மேலும் தமிழ் சினிமா ராக்கர், ‘Gee’ டி.வி, ‘YouTube’ போன்ற எத்தனையோ சேனல்கள் மொபைலில் பார்க்கும் வசதி வந்துவிட்டது. ஸ்போர்ட்ஸ் கிரிக்கெட் இளைஞர்கள் மத்தியில் ஓரளவு வரவேற்பு பெற்று இருக்கின்றன.

“இப்போ பாலிடிக்ஸ் நல்ல சப்ஜெக்டாக இருக்கிறது. எத்தனை பத்திரிகைகள் நக்கீரன், ஜூனியர் விகடன், துக்ளக் அரசியல். நிறைய டி.வி அதுதான் பண்ணுறாங்களே மக்கள் டிவி, ஜீ டிவி, விவாத மேடை, ஆயுத எழுத்து, மக்கள் மேடை, அச்சமில்லை.

“இந்த புரோகிராம்கள் எல்லாமே ஏதோ ஒரு விஷயத்தை எடுத்து அதை விவாதிப்பார்கள். அதில் கூச்சல்தான் அதிகமாக இருக்குமே ஒழிய மக்களைக் கவரும் விஷயம் இருக்காது. அந்தந்த கட்சிக்காரர்கள் பேசும் போது அந்தந்தக் கட்சிக்காரர்கள் கைதட்டுவார்கள் ரசிப்பார்கள் பாராட்டுவார்கள் பொதுமக்களுக்குக் கவர்ச்சியான அம்சம் ஏதும் இருக்காது.”

“ஓரளவு உன்னுடைய கணிப்பு சரியாகவே இருக்கிறது. உன்னுடைய ப்ரோக்ராம் பற்றி சொல்லு.”

“உங்கள் எம். எல். ஏ-” அப்படி ஒரு ப்ரோக்ராம் பண்ணலாம். யார் வேண்டுமானாலும் பேசலாம் ஜெயிப்பவர்களுக்கு 160 லிட்டர் பிரிட்ஜும் எம். எல். ஏ சீட் வாங்கி தரப்படும் என்றும் அறிவித்து விடலாம். எல்லா இளைஞர்களுக்கும் இது ஒரு கவர்ச்சியைக் கொடுக்கும்.

“நல்லா இருக்கு. ஆனால் தலைப்பை மாற்றி விடலாம் போட்டியில் வெற்றி பெறுங்கள். எம். எல். ஏ சீட் பெறுங்கள். இல்லே இல்லே நிதானமாக சிந்திக்கலாம். எலக்ஷன் இன்னும் ஆறு மாதத்தில் வருவதனால் எல்லா கட்சியும் வேட்பாளர்களை தெரிவு செய்ய வேண்டும்.”

“அப்படியே செய்திடலாம் சார். இப்ப ஹாட்டா இருக்கும் போதே செய்திடலாம் மற்ற டி.வி காரங்க உடனே காப்பி பண்ணிடுவாங்க.”

“ஏன் தம்பி M. L. A??? எம்.எல்.ஏ ஐ பெரிதாக போட்டுவிட்டு கேள்விக்குறியை சின்னதிலிருந்து பெரியதாக போட்டுவிட்டால் மக்களைக் கவராதா?”

“நாம இரண்டு மூன்று தலைப்புகளைப் போட்டு நாலு பேரிடம் இது பற்றி கேட்போமா? சார் ஒரு விஷயம். நான் சொன்னது உங்களுக்கு மட்டும்தான். நீங்களே சொன்னது போலவோ இல்லை

வேறு யாராவது சொன்னது போலவோ நாளைக்கு அறிவித்து விடுங்க.”

“என்ன சண்முகம். வேறு யாரோ செய்யறதை தான்தான் செய்ததாக எல்லோரும் சீன் போடுவாங்க. நீ என்னடான்னா, நீ செய்ததை வெளியில் சொல்ல வேண்டாம்னு சொல்றே. ரொம்ப வித்தியாசமா தெரியறே.”

“அப்படி இல்லே சார். நீங்க வேறு மாதிரி கோணத்திலே பார்க்கணும். நான் இந்தக் கம்பெனிக்கு ரொம்ப ஜுனியர். நான் சொன்னதா சொன்னா, ஸீனியர்கள் என்ன செய்வார்கள். நமக்கு ஒண்ணும் ஐடியா இல்லாத மாதிரியும் ஏதோ எனக்கு மாத்திரம் ஐடியா வந்த மாதிரியும் பேசுவாங்க. ஐடியா நல்லதா கெட்டதான்னு பார்க்க மாட்டாங்க. அந்த மாதிரி நிலைமையிலே அவங்க எல்லாம் நீங்க சொன்னீங்களேன்னுட்டு ஒத்துக்கிட்ட மாதிரி தலை ஆட்டுவாங்களே தவிர முழு மனசோடு வேலை செய்ய மாட்டாங்க. அப்படி இருந்தாலும் பரவாயில்லை. இந்த நிகழ்ச்சி தோல்வி அடைய விரும்புவார்கள். ஏன் தோல்வி அடைய திட்டம் போட்டு வேலை செய்வார்கள்.

“நீ சொல்வது ஒரு வகையில் ஏற்றுக் கொள்ளக் கூடியதாகத்தான் இருக்கு.”

“இரண்டாவது நீங்க சொன்னதாகச் சொன்னால் அதில் ‘கான்ட்ரவர்ஸி’ வராது. அதில் ஏதாவது புதிதாய்ச் செய்து உங்களிடம் பரிசும் பாராட்டும் பெற கடினமாக உழைப்பார்கள். எங்கேயும் கூட இருப்பவர்களால் தங்களில் ஒருவன் சிறப்பு பெறுவதை பொறுக்க முடியாது. ஒருத்தன் பணக்காரன் ஆனால் ‘first enemy is his brother’ என்று சொல்லுவாங்க”

“அப்பப்பா. நீ ஏதோ சாதாரணமான பையன் என்று இருந்தேன். இவ்வளவு ஆழமா வெரி குட்”

M. L. A??? போஸ்டர்கள் முதல் நாள் சுவர்களை அலங்கரித்தன.

**எஸ். வெங்கட்ராமன்**

“என்னடா. எம்.எல்.ஏ போஸ்டர்கள் யாரோ ஒட்டியிருக்கிறார்கள்.?”

“தேர்தல் கமிஷன் அறிவிக்கணும். தேதி கொடுக்கணும். கடைசி வரையில் கூட்டணி பேரம் ஓடும். வேறு வழியில்லாமல் டயத்துக்குள் கூட்டணி முடிவு செய்ய வேண்டும் என்று ஏதாவது சரியோ, ஒத்து வருமோ என்று செய்து விடுவார்கள்.

“தலைவர் ஏதோ நிர்ப்பந்தத்திலே பண்ணி இருப்பார். நமக்குத் தெரியாதா அந்த கட்சியை எப்படி ‘க்ளோஸ்’ பண்ணறதுன்னுட்டு. இது எல்லாம் நமக்கு புதுசு ஒன்றும் இல்லை. தொண்டர்கள் அங்கங்கே பரிமாறிக் கொள்வார்கள்.”

இத்தனை அலம்பல் இருக்கும் போது இந்த போஸ்டர் என்னவாயிருக்கும். தமிழ் நாட்டில் வேலை இல்லாமல் வெட்டியாய் சுவரில் வரும் போஸ்டர் ஆராய்ச்சி செய்யும் கும்பல் பேச ஆரம்பித்தது.

**இரண்டு நாள் கழித்து M. L. A??? அறிவிப்பு இரண்டு நாளில்**.

“என்னடா. எவனுக்குப்பைத்தியம் பிடிச்சு இருக்கு? எம்.எல்.ஏ அறிவிப்பு இரண்டு நாளில் அப்படி போட்டு இருக்கான்.”

“டப்பா டிவியில் எம்.எல்.ஏ. வுக்காக போட்டி வைக்கிறார்கள். யார் வேண்டுமானாலும் கலந்து கொள்ளலாம். தேர்நதெடுத்தவர்கள் மூவருக்கு தேர்தலில் டிக்கெட்டும் 10 லட்சம் பணமும் பரிசு. ‘Viral Viral’ என்று வாட்ஸ்அப்பில் சொல்வார்களே அது எப்படி பரவும் என்று எல்லோருக்கும் தெரிந்து கொள்ள ஒரு பெரிய வாய்ப்பு என்று சொல்ல வேண்டும்.”

“என்னடா மச்சி. திடீரென துபாயிலிருந்து வரப் போறேன்னு வீட்டிலேயும் சொல்லலே.”

“டப்பா டி.விலே பார்த்தியா?”

“ஆமா. எம்.எல்.ஏ. க்கு தேர்வு அப்படின்னு என் ஃப்ரெண்ட்ஸ் சொல்லிக்கிட்டு இருந்தாங்க.”

“ ஆமா, எம்.எல்.ஏ சீட் கிடைக்கிறதுன்னா என்ன தெரியுமா? தலைவர் வீட்டு வாசலிலே பழியாய் வருஷக்கணக்கா தேவுடு காக்கணும். நமக்கு நல்ல நேரம்னா ஒண்ணு ரெண்டு வருஷத்தில் தலைவர் நம்மைப் பார்த்து என்ன பெயர் என்று கேட்பார். அப்புறம் அவர் வீட்டு அம்மா, பையன், நாய், மாடு இல்லை அவர் சின்னவீடு ஏதோ ஒன்று கூட தொடர்பு வைத்து அவங்க நம்ம பெயரைச் சொன்னால் நமக்கு சான்ஸ் வரும்.

“இல்லை ஊரிலே கட்டைப் பஞ்சாயத்து பண்ணணும். ரவுடி என்று பெயர் வாங்கணும். பணம் எக்கச்சக்கமாக பண்ணி தலைவர்கிட்ட கொண்டு கொட்டினால் சான்ஸ் கிடைக்கும்.”

“இப்போ எம்எல்ஏ போட்டியில் கலந்துக்கிறதுக்காக துபாயிலிருந்து லீவு போட்டுட்டு வந்திருக்கியா?”

“ஆமாம் ட்ரை பண்ணிப்புட வேண்டியதுதான். டிவியில் வந்தாலே நான் பெரிய ஆள் தான்.”

ஞாயிறு 4. 00 மணிக்கு நேரடி ஒலிபரப்பு.

சூரியன் FM இன்று என்னவென்று சரியாக தெரியவில்லை. டிராபிக் ஜாம் எங்கேயும் கிடையாது டிராபிக் ப்ரீயாக இருக்கு குறித்த நேரத்தில் போய் சேருவீர்கள் தொடர்ந்து அறிவிப்புகளை செய்து கொண்டிருந்தது.

ஓலா, ஊபர் கஸ்டமர்ஸ்க்கு சிறப்பு தள்ளுபடி சலுகைகளை குறுஞ்செய்தி அனுப்பிக்கொண்டிருந்தது

டிவியில் நிர்வாகி வந்தார்.

“எம். எல். ஏக்கள் மக்களின் பிரதிநிதி. ஆனால் தற்போதுள்ள நடைமுறையில் மக்களின் பிரதிநிதி என்பது மாறி தலைவரின்

பிரதிநிதி என்று ஆகிக் கொண்டிருக்கிறது. உண்மையான மக்களின் பிரதிநிதியை தேடும் வேட்டையில் டப்பா டிவி இறங்கி இருக்கிறது.

“முதல் தடவையாக இந்தியத் தொலைக் காட்சியின் வரலாற்றில் முதல் முறையாக இந்த சீரிய முயற்சி உங்களின் பங்களிப்பினால் வெற்ற பெற உங்கள் நல் ஆதரவைக்கோருகிறேன். வெற்றி பெரும் அன்பர்களுக்கு என் நல் வாழ்த்துக்கள்.

“நிறைய அன்பர்கள் வேட்பு மனு செய்திருந்தனர். அவர்களில் குலுக்கல் முறையில் (இரண்டு பேர்கள்) தேர்வு செய்து அவர்களை நேர்காணும் பொறுப்பு சண்முகத்திற்கு கொடுக்கப்பட்டிருக்கிறது.

“நிகழ்ச்சியை கண்டு களியுங்கள். விமர்சனங்கள் வரவேற்கப்படுகின்றன. இந்த நிகழ்ச்சிக்கு எல்லோரையும் வரவேற்று குலுக்கல் முறையில் தேர்வான இரண்டு நண்பர்கள் குமார், முருகன் இருவரையும் முறைப்படி அறிமுகப் படுத்துவதில் பெருமை கொள்கிறேன் நேயர்கள் இவரிடம் என்ன கேள்வி கேட்க விரும்புகிறீர்களோ அதையும் கேள்வி நேரத்தில் கேட்கலாம்.”

சண்முகம் : வணக்கம் குமார். நீங்கள் முன்னாள் எம்எல்ஏ என்று போட்டிருக்கிறீர்கள்.

குமார் : ஆமாம் நான் முன்னாள் எம்எல்ஏ செங்கல்பட்டு தொகுதி.

சண்முகம் : ஏன் செங்கல்பட்டு தொகுதியை தேர்ந்தெடுத்தீர்கள்?. நீங்கள் அதில் எந்த பகுதியில் வசிக்கிறீர்கள்?

குமார் : என் வீடு வண்ணாரப்பேட்டை தலைவர் எங்கு கை காட்டுகிறாரோ அங்கு நிற்பேன் தலைவர் வழி நடப்பேன்

சண்முகம் : இந்த போட்டிக்கு ஏன் விண்ணப்பித்தீர்கள்? நீங்கள் தான் ஏற்கனவே எம்.எல்.ஏ வாக இருக்கிறீர்களே.

குமார் : யாரோ தலைவர்கிட்ட என்னைப் பற்றி தப்பா போட்டுக் கொடுத்துவிட்டான். இந்த போட்டியில் சான்ஸ் கிடைச்சா

தலைவருக்கு டிவி மூலமா என் விசுவாசத்தைச் சொல்ல முடியும் அப்படி நினைச்சேன்.

சண்முகம் : குலுக்கலில் நீங்க வந்துட்டீங்க நாங்க அப்ளிகேஷன் நம்பர் கொடுத்து அதில் தேர்வு செய்தோம் உங்கள் தொகுதிக்கு நீங்கள் செய்த பணி ஏதாவது சொல்ல முடியுமா?

குமார் : தலைவர் ஆணையிட்டால் செயல்படுத்த வேண்டிய சாதாரண தொண்டன் நான். எனக்கு என்றும் ஒன்றும் இல்லை. தலைவர் நினைப்பதுதான் நான் நினைப்பது. அவருக்கு உயிர் உள்ள வரைக்கும் விசுவாசமாக இருப்பேன். உடல் மண்ணுக்கு. உயிர் தலைவர் குடும்பத்திற்கு. நன்றி.

குலுக்கலில் அடுத்தாக முருகன் வருகிறார்

சண்முகம் : முருகன் சார் இந்த நிகழ்ச்சி பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

முருகன் : மக்கள் பிரதிநிதி என்பது போய் தலைவர் பிரதிநிதியாய் எம்.எல்.ஏ. க்கள் மாறிவிட்டார்கள். நான் சிவகாசி பகுதியில் இருந்து வருகிறேன். இப்போதுள்ள தேர்தல் முறையில் பல குறைகள் வந்துவிட்டன. அரசியலில் சேவை தொண்டு என்ற வார்த்தைகளுக்கு இடம் இல்லாமல் போய்விட்டன. தலைவர்களுக்கும் தெரியும். தேர்தல் நடத்துபவர்களுக்கும் இது நன்றாகவே தெரியும். தெரியாத மாதிரி கண்ணை மூடிக்கொண்டு பாசாங்கு செய்கிறார்கள். தேர்தல் சிறப்பாக எந்தவித அசம்பாவிதங்களும் இன்றி நடந்தன. ஒருவர் அடுத்தவரைப் பாராட்டிக் கொள்கிறார்கள். முதல் தடவையாக எம்எல்ஏ ஆக விரும்புபவர்களை டிவி மூலம் தேர்வு செய்வதன் மூலம் சிறந்த முறையில் சமூக சேவை செய்கிறவர்கள், தொகுதியை பற்றி நன்கு அறிந்தவர்கள், தொகுதிக்கு இன்னென்ன செய்தால் நலம் என்று நம்புகிறவர்கள், தொகுதியில் உள்ள மக்களோடு பழகி

அவர்கள் குறைகளை களைபவர்கள் பதவிக்கு வரமுடியும். டப்பா டிவிக்கு என் வாழ்த்துக்கள். தொகுதி பற்றி அங்குள்ள மக்கள் பிரச்சினைகள் பற்றி தேர்தலுக்கு நிற்பவர் நன்கு அறிந்திருக்க வேண்டும். நீங்கள் இன்னும் சிறப்பாக செயல்படலாம் செயல் படவேண்டும் என்பது என் விருப்பம். இதை சொல்லத்தான் நான் வந்தேன்

சண்முகம் : நேரமின்மை காரணமாகவும், இது போன்ற நிகழ்ச்சி முதலில் வருவதாலும் நிறைய அப்ளிகேஷன்கள் குவிந்ததாலும் ஆங்காங்கே குறைகள் தென்படுகின்றன. நீங்கள் சொன்னதையும் எடுத்துக்கொண்டு சிறப்பாகி செய்ய முயற்சிப்போம். உங்களுக்கும் உங்களின் மேலான கருத்துக்களுக்கும் எங்கள் நன்றிகள்

எத்தனையோ கடிதங்கள் இது பற்றி வந்திருக்கின்றன அவைகளை படித்ததில் எம்.எல்.ஏ வாக எந்த தொகுதியில் வேட்பாளராக விரும்புகிறார் அந்த தொகுதி பற்றி அவருக்கு என்ன தெரியும் தொகுதி பிரச்சினைகளை நன்றாக தெரிந்து வைத்துள்ளாரா தீர்வு இருக்கிறதா என்றெல்லாம் விவாதித்தால் சிறப்பாக அமையும் என்று தொகுக்க முடியும். அதை எடுத்துக்கொண்டு ஒரு படிவம் அமைத்திருக்கிறோம் போட்டிக்கு வருபவர்கள் இந்த படிவத்தை நிரப்பி முதலில் அனுப்ப வேண்டப்படுகிறார்கள்"

அடுத்த விளம்பரத்தில் இது பற்றி அறிவிப்பு: அப்ளிகேஷன் போடுபவர்கள் கீழே உள்ள படிவத்தை நிரப்பி அனுப்பினால் எம்.எல்.ஏ புரோகிராம் இன்னும் சிறப்பாக அமையும்

தொகுதி:

மக்கள் எண்ணிக்கை :

ஆண் :

பெண் :

படித்தவர்கள் : சதவீதம்

பள்ளிகள் :
கல்லூரிகள் :
தொழிற்சாலைகள் :
வேலை பார்ப்போர் :
சாராயக் கடைகள் :
விவசாயம் :
தொகுதியை மேம்படுத்த உங்கள் திட்டம்:
தொகுதியில் மக்களை பாதிக்கும்/
போக்குவரத்து பாதிக்கும் பிரச்சனை

அடுத்த ஞாயிற்றுக்கிழமை மாலை 3. 00 மணிக்கு மீண்டும் சந்திப்போம் நிகழ்ச்சி 3. 00 மணி t 8. 00 மணி. 'ரேட்டிங்' எகிறியது. அட்வெர்டைஸ்மென்ட் குவிந்தது. ஸ்'பெஷல் ரேட்ஸ்' டிவி கேட்டது.

வெளிநாடு சென்றிருந்த டைரக்டர் அடுத்த வாரம் வர வேண்டியவர். ப்ரோக்ராம் முடிந்த அடுத்த நாள் ஆபீஸில் உட்கார்ந்து இருந்தார். அவர் கோபம் முகத்தில் கனலாய் தகிக்க அவரிடம் யாரும் நெருங்குவதற்கு பயந்து யாரும் போகவில்லை.

உள்ளே வந்த சேர்மன் டைரெக்டரைப் பார்த்து, "குட் மார்னிங் சார் என்ன திடீரென. உங்களுக்கு அடுத்த வாரம் வரை அமெரிக்காவில் ப்ரோக்ராம் இருக்கே"

டைரக்டர் இருக்கு. வரவேண்டியதாப் போச்சு. அவர் பேச்சில் கடுமை அதிகமாகத் தெரிந்தது.

"எம்.எல்.ஏ. புரோகிராம் யாரை கேட்டு முடிவெடுத்தே?"

சேர்மன் :"ஏன் சார். டி.விக்கு ஏதாவது பண்ணணும் என்று பேசிக் கொண்டிருந்தோம். உங்களைப் போன்லே பிடிக்க முடியல்லே. பையனுக்கு உடல்நிலை சரியில்லை என்று போயிருந்தீர்கள். அதிகமாக தொந்தரவு செய்ய வேண்டாம் என்று இருந்தேன். இது ஒரு ப்ரோக்ராம் தானே. ரேட்டிங் பிரமாதம். ஓயாத போன்கால்கள்"

டைரக்டர் சீறினார், “நிறுத்தைய்யா. அதெல்லாம் நான் கேட்கல்லே. நான் யாருக்கு பினாமி என்று உனக்கு நன்றாய்த் தெரியும். தலைவர் என்னை பிடிச்சு காய்ச்சிட்டார். எம்.எல்.ஏ. ன்னாலே நாமே சொல்ற ஆட்கள்தான். அவங்க ஒரே வேலை கையை தூக்குன்னா தூக்கணும். நாம பேசினா மேஜையைத் தட்டணும். நாய் மாதிரி விசுவாசமாய் இருக்கணும். எதிர்க்கட்சிக்காரர்கள் என்ன பேசினாலும் கத்தணும். எம்.எல்.ஏ ன்னா அப்படி நடைமுறைக்கு கொண்டு வந்துகிட்டு இருக்கோம். இப்போ புதுசா மக்கள் பிரதிநிதி இதெல்லாம் யாருக்கும் தெரியாது டிவியிலே இந்த புரோகிராம் டிராப் பண்ண சொல்லிட்டார்”.

சேர்மன் “சார் என்னது?” என்று தயங்கினார்.

“ஒண்ணு டிவியிலிருந்து நீ வெளியே போகணும்னு கத்தினார்.. தலைவர் சொல்லிட்டாரு. வேறு பேச்சே இல்லை. நான் சார்கிட்ட பக்குவமாய்ச் சொல்லி ரொம்ப வருஷமா கூட இருக்கான். பிழைச்சி போகட்டும். நாம புதுசா ஒரு டிவி சேனல் ஆரம்பித்து விடலாம் என்று சொல்லி, டிவியை உனக்கு கொடுக்க வைத்துள்ளேன். அதைக் காலத்துக்கும் நீ மறந்து விடக்கூடாது. நான் தனியா டிவி தொடங்குகிறேன். முதல் வேலையா நிகழ்ச்சி நிறுத்தப்படுகிறது என்று அறிவித்து விடு மற்றதை அப்புறம் பொறுமையாய் பேசலாம்.”

“நான் வேணா தலைவரைப் போய்ப் பார்க்கட்டுமா?”.

“உனக்கு பைத்தியம் பிடிச்சிருக்கா? தலைவர் உன்னைக் கடிச்சே கொன்ருவார் உன்னைப் பார்க்கவே பிடிக்கலையாம். நீ வரவே கூடாதுன்னுட்டார். இந்த டிவியை நீயே வச்சுக்க. பிழைச்சுப் போ. தலைவர் என்னை தனியா டிவி ஆரம்பிக்கச் சொல்லிட்டார். உனக்குத்தான் தலைவரை பற்றித் தெரியுமே. முடிவு பண்ணிட்டார்னா யார் சொன்னாலும் கேக்கமாட்டாரு. உனக்கு தெரியுமே டிவி விளம்பரம் என் மூலமா தான் வருது”.

சேர்மன் விக்கித்து நின்றார். எவ்வளவு நேரம் அப்படி நின்றார் என்று அவருக்கே தெரியாது.

“என்ன சார். இப்படி நின்னுகிட்டு இருக்கீங்க” என்று சண்முகம் அழைத்ததும் நினைவுக்கு வந்தார்.

சண்முகம் “தண்ணீர் வேணுமா? இல்லை டீ, காப்பி ஏதாவது கொண்டு வர வேண்டுமா?” என்று கேட்டான்

“ஒன்றுமில்லை. நான் ரூமுக்குப் போகிறேன்”.

“டிக்கி டிவி” வருகிறது. உங்கள் மேலான கருத்துக்களை பிரதிபலிக்க - புதுப்பொலிவுடனும் புதிய தொழில் நுட்பத்துடன் – உலகத்தின் தலைசிறந்த எல்லா சானல்ளையும் கொண்டு வருகிறது. “டிக்கி டிவி”. இரண்டே நாட்களில் சென்னைச் சுவர்கள் புதுச்சட்டையுடன் ஒளி வீசின.

“நாம ஏதாவது ஒப்பந்தம் போடணும்னா, கம்பெனி ஆரம்பிக்கணும்னா இங்கே பர்மிஷன் அங்கே கிளியரன்ஸ் சாகடிக்கிறாங்க. ஆனால் இவங்களுக்கு எல்லாம் எப்படியோ எந்த தொழிலும் எப்ப வேண்டும் என்றாலும் ஆரம்பிக்க முடிகிறது”. வேலு ஆரம்பித்தான்.

“நம்பளையும் அவங்களையும் பற்றி பேசவே கூடாது. உங்ககிட்ட உள்ள மொத்த சொத்துக்களையும் சேர்த்தா 2 லட்சம் தேறாது. அவங்க சொத்துக்கள் கோடிகளில் புரளும்..

அவங்க வீட்டு நாய்க்கு ஆகிற செலவு உங்க குடும்பத்துக்கு ஆகும். பேசாமல் நாட்டு நடப்பை பார்ப்பதோடு நிறுத்திக்க. ஒண்ணே ஒண்ணு அவ்வளவு பெரிய ஆள் எத்தனையோ கோடிகளுக்கு அதிபதி நம்மைப் பார்த்து “ஐயா, வணக்கம். உங்க ஓட்டை எனக்கு போடும்படி உங்கள் கால்களில் விழுந்து வணங்கி கேட்டுக்கொள்கிறேன்” என்பார்.

ஜனநாயகத்தின் மதிப்பை உணர்ந்து ஆகட்டும் தலைவரே என் ஓட்டு உங்களுக்குத்தான் என்று மரியாதையுடன் செல்லவேண்டும்" சண்முகம் விவரித்தான்.

சண்முகத்திற்கு ஏதோ மாதிரி இறுக்கமாய் இருந்தது. முதலாளியை பார்க்கிறான். ஆனால் பேசுவதற்கு ஏதோ தடையாய் இருந்தது.

சண்முகம் "சார் இன்னைக்கு நான் சினிமா பார்த்துட்டு வரலாம் என்றிருக்கேன்". முதலாளியிடம் மெதுவாக ஆரம்பித்தான்.

அவனுக்கு அவ்வளவு இறுக்கம். டிவியில் வழக்கமாக ஏதோ புரோகிராம்கள் ஓடிக்கொண்டிருந்தன.

டைரக்டர் தனியாய் டிவி ஆரம்பிப்பது பற்றி எல்லோரும் பேசிக் கொண்டிருந்தார்கள், குரூப் குரூப்பாக பேசுவார்கள். யாராவது வந்தால் பேச்சை மாற்றி விடுவார்கள். ஏதோ ஒரு நிழல் யுத்தம் நடப்பதை எல்லோரும் உணர முடிந்தது. வேலைக்கு வந்தார்கள். உயிரோட்டம் குறைவாகவே இருந்தது. இறுக்கத்திலிருந்து வெளியேறவே சினிமாவுக்கு போகலாம் என நினைத்து அவரிடம் கேட்டான்.

தலையை யந்திரத்தனத்துடன் ஆட்டினார்.

அவர் பேசியே சில நாட்கள் ஆகிவிட்டது. சினிமாவுக்காக காலாற நடந்து சற்று தொலைவில் உள்ள தியேட்டருக்குப் போகலாமா என்று நடந்தான்.

வழியில் ஒரு ஹோட்டல் சினிமாவுக்கு நிறைய நேரம் இருக்கிறது. காப்பி ஒன்று குடிக்கலாம் என்று உள்ளே போனான். 'அக்கவுண்ட்ஸ் மேனேஜர்' என்னும் கணக்கு அதிகாரியைப் பார்த்தான்.

"என்ன சண்முகம் எப்படியப்பா இருக்கே".

“என்ன சார், கொஞ்ச நாளா உங்களை காணோம்.” ஏதோ மெக்கானிக்கலா கேட்டு வைத்தான்.

அந்த டைரக்டர் கூட கணக்கு அதிகாரி போனது எல்லோருக்கும் தெரிந்ததுதான்.

“என்ன சண்முகம் உனக்கு தெரியாதா. நான் டைரக்டர் கூட புது டிவிக்கு போயிட்டேன். நாம என்ன கூலிக்காரங்க.. சம்பளம் கொஞ்சம் கூட தரேன்னார். சரி போயிட்டேன்.. சரி நானே உன்னை பார்க்கணும்னு இருந்தேன்.. நீ இப்போ ப்ரீயா இருக்கியா? “

“இல்லே சார். சினிமாவுக்கு போகலாம்னு வந்தேன்.”

“நல்லதாய் போச்சு. டைரக்டர் உன்னைப் பார்த்து பேசணும்னு சொன்னார். சந்தர்ப்பம் வாய்க்கவில்லை. அங்கே ‘ஏ.ஸி. ரூம்’ போவோம். சினிமாவுக்குத்தான் அரை மணி நேரம் இருக்கே.”

“நான் போய் டிக்கெட் எடுக்க வேண்டும்.”

“டேய், ஐயாவுக்கு ஒரு பால்கனி டிக்கெட் போட்டு வா”.

சண்முகம் :”பரவாயில்லை சார்”.

“நீ சும்மா இரு தம்பி. உனக்கு உன்னோட மதிப்பு தெரியாது.”

அவனுக்கு பேச வாய்ப்பு அளிக்கவில்லை. அவனைக் கட்டிப்பிடித்து ‘ஏ.ஸி. ரூம்’ போனார்கள். அவனுக்கு தர்மசங்கடமாக இருந்தது..

“நீ இந்த ‘ஃபீல்ட்டு’க்குரொம்ப புதுசு. உனக்கு இதில் உள்ள நெளிவு சுளிவு தெரியாது. இந்த தொழிலில் டி.வி வந்த நாளிலிருந்து இருக்கிறேன். எனக்கு இந்த தொழில் அத்துபடி.. உனக்குத் தெரியுமோ தெரியாதோ நான் இப்போ சொல்ல வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறேன். நமது டிவி லாபகரமாக ஓடியதே நம்ம டைரக்ரைத் தொட்டுத்தான். குரலை தாழ்த்திக் கொண்டு அவர் மந்திரியின்

பினாமி.. அவர் சொன்னால் விளம்பரங்கள் கொட்டும்.. டிவி வந்த புதிதில் ஒரு சேட்டு தெரிந்தோ தெரியாமலோ நிறைய சினிமாக்காரர்களுக்கு டி.வி உரிமை வாங்கி வைத்திருந்தார். நான் தான் அவர் கிட்டே 'ரைட்ஸ்' கேட்டேன்.யானை விலை குதிரை விலை சொன்னார். டைரக்டர் கிட்டே சொன்னேன்.

"சரி விடு நான் பார்த்துக்கிறேன்" என்றார்.

"அடுத்த நாள் போலீஸ் ரெய்டு. குரலை கம்மி பண்ணி கொண்டார். ரெய்டு பண்ணும் போது ஹெராயின் பாக்கெட் உள்ளே வைக்க ஏற்பாடு செய்துவிட்டார். போலீஸ் கேஸ், டிரக் கேஸ் மேலே கேஸ். சேட் இவர் காலில் விழுந்தார்.

"சார், என்னை காப்பாத்துங்க சார்"

"ஒண்ணும் கவலைப்படாதே"

'ரைட்ஸ்' யானை விலை குதிரை விலை இல்லை, அடிமாட்டு விலைக்கு வாங்கினார்.

"எதுக்கு சொல்கிறேன் என்றால் அவர் வில்லாதி வில்லன். அவருக்கு ஏகப்பட்ட பணம்.. அந்த சேர்மன் இவருக்கு எதிரா பிஸினஸ் பண்ண முடியாது.. துண்டைக் காணோம், துணியைக் காணோம் என்று ஓட வேண்டியதுதான்.. நான் அவரிடம் உன்னைப் பற்றி துடிப்பான பையன்னு .. சொல்லி இருக்கேன். அங்கே வாங்குற சம்பளத்தை விட 25% கூட்டித் தரச் சொல்கிறேன். அங்கு அவர் உன்னை ஏமாற்றி கொண்டிருக்கிறார். சம்பளமில்லாத டிரைவர், வீட்டு வேலை எல்லாவற்றுக்கும் உபயோகப் படுத்திக் கொண்டிருக்கிறார். நீ இங்கே வந்தால் நல்லா இருக்கலாம். அப்புறம் உன் இஷ்டம். நான் சீனியர் என்று என்னை மதித்து என் அபிப்பிராயம் கேட்டால் இங்கு வந்து விடு என்பேன். எல்லோரும் 'பெட்டர்

ப்ராஸ்பெக்ட்' என்று ஒரு கம்பெனியிலிருந்து இன்னொரு கம்பெனிக்கு 'ஜம்ப்' ஆவது இப்போது சர்வ சாதாரணமாயிடுத்து".

"சார், சினிமாவுக்கு டயம் ஆயிடுத்து."

"என்னப்பா, ஒன்னும் பிடி கொடுத்து சொல்லவில்லை".

"இல்லை சார் நான் முதலில் வந்தபோது அவர் தான் என்னை ஆதரித்தார். அவரை விட்டு வருவது என்னால் முடியாது".

தெளிவான பதில். நெளிந்தார்.

"சரி உன் இஷ்டம். எல்லோருக்கும் எப்போதும் நல்ல சான்ஸ் வராது. வந்த சான்ஸை தவற விட்டால் பின்னால் வருத்தம் வரும்."

"சரி. நான் வரவா. ரொம்ப தாங்க்ஸ்"

"தாங்க்ஸ் எதுக்குப்பா?".

"என்ன சார் நீங்க டிக்கெட் எடுத்து கொடுத்திருக்கீங்க".

"இது ஒரு பெரிய மேட்டர் இல்லைப்பா. படம் நல்லா 'என்ஜாய்' பண்ணுப்பா"

சேர்மனிடம் இதுபற்றி சொல்லணுமா இல்லை சும்மா இருக்கலாமா? குழம்பினான்.

மறுநாள் வேலு ஆபீஸில் போன்லே கூப்பிட்டான். "சண்முகம் நான் அவசரமா தனியா பேசணும். எப்போ பேசலாம்".

"ஏண்டா என்ன விஷயம்? அவ்வளவு அவசரமா?"

"ஆமாம், சண்முகம் அவசரம் தான்".

"எவ்வளவு நேரம் பேசணும்?"

"அரை அவர்".

“ஆஃபீஸ் விட்டுப் போகும்போது போன் பண்ணு. எங்க சார் ஏதோ மீட்டிங் போறேன். வர லேட்டாகும்னு சொல்லிட்டு போனார். நாம பக்கத்திலுள்ள பார்க்கிலே போய் பேசலாம்.”

““ஓகே”.

ஆறு மணிக்கு போன் சிணுங்கியது. கேட்டில் மீட் பண்ணலாம். மெசேஜ் பறந்தது.

“வா சண்முகம். பைக்கிலே ஏறு”.

பார்க்கில் போய் உட்கார்ந்தார்கள்.

“சொல்லு. வேலு”

“சண்முகம், நேத்து டைரக்டர் போன் பண்ணி மாலை 6 மணிக்கு ஆஃபீஸ் முடிந்தவுடன் அந்த ஹோட்டலுக்கு வரச் சொன்னார். அக்கவுண்ட்ஸ் மேனேஜரும் கூட இருந்தார். அவர் ஆரம்பிக்கிற டி.விலே என்னை சேரச் சொன்னார். அவர் என்ன சொன்னார் தெரியுமா? படிக்காத சண்முகத்திற்கு நிறைய படித்த நீ உதவியாளர். இது கேவலமாய் இல்லை. எங்க டிவிக்கு வந்தா நீ தான் ப்ரொடக்ஷன் இன்சார்ஜ்’. என்ன சொல்ற.” ன்னு கேட்டார்

“உங்க ஆஃபர் நல்லாவே இருக்கு. சார், எனக்கு ஒரு நாள் டைம் வேணும்னு கேட்டு விட்டு வந்தேன். என்ன சொல்ற சண்முகம்”.

சண்முகத்திற்கு இரண்டு நாள் முன்பு அதே கணக்கு அதிகாரியைப் பார்த்த விஷயம் சொல்லலாமா, கூடாதா? என்ற குழப்பம். அவன் யாரிடம் பகிரலாம் என்ற குழப்பத்திலிருந்து வெளிவரும் முன்பே புதுக்குழப்பம். எதற்கும் காத்திருந்து பார்ப்போம் என்று முடிவு பண்ணினான்.

“உனக்கு இந்த சேர்மன் கூட அவ்வளவு நெருக்கமில்லை. நல்ல சான்ஸ் வரும்போது அதை மிஸ் பண்றது நல்லது இல்லை. நீ ஜாயின் பண்ணிக்க. நான் சேர்மன் கிட்ட சமாளிச்சிக்கிறேன். நம்ம

‘காண்டாக்ட்’ தொடரும். தினமும் என்ன நடக்கிறது எப்படி நடக்குதுன்னு இரவு 10 மணிக்கு மேல் பேசலாம்.”

“சரி சண்முகம்.”

நாட்கள் வேகமாக நகர்ந்தன. நிகழ்வுகளும் வேகமாக நகர்ந்தன. அவன் டைரக்டர் கூட ஜாயின் பண்ணிட்டான்.

“ஏதோ ஒன்னு நீ படிச்ச படிப்புக்கு ஏற்ற சம்பளமும் பதவியும் உனக்குக் கிடைத்தது மிகவும் மகிழ்ச்சியாய் இருக்கு.” என்று ஒரு நாள் பேசும்போது சண்முகம் சொன்னபோது வேலு தன் நினைவை இழந்தான். இவனால் எப்படி இப்படி இருக்கமுடிகிறது என்று வியந்து நின்றான்

“சண்முகம், நீ எவ்வளவு பெரியவன். நான் நீ ஏதோ தப்பா நினைத்து கொள்ள போகிறே என்று பயந்து கொண்டிருந்தேன். ஏனென்றால் வேலை வெட்டி எதுவும் இல்லாத எனக்கு நீ தான் வாழ்வு கொடுத்தே. என்னை டைரக்டர் கேட்டவுடன் நான் உன் பெயர் சொல்லி என்னை விட சிறப்பாய் பண்ணக் கூடியவன் என்று சொல்லி இருக்க வேண்டாமா? அதை கொஞ்சமும் மனதில் வைத்துக் கொள்ளாமல் எனக்கு அவ்வப்போது உதவியும் செய்து தொழில் நுணுக்கங்களையும் சொல்லிக் கொடுத்து தவறு செய்யும் போது அதை சுட்டிக்காட்டி நான் நல்ல பெயர் எடுக்க நீ தான் எப்போதும் எனக்கு உதவி கொண்டு இருக்கிறாய். நான் உனக்கு என்ன செய்யப் போகிறேனோ தெரியவில்லை” உணர்ச்சியில் நெகிழ்ந்தான்.

“ஒன்றும் வேண்டாம். நல்ல நண்பனாய் இரு.”

ஒரு நிமிஷம் தன்னிடம் டைரக்டர் கேட்டதைச் சொல்லலாமா என்று நினைத்தான். வேண்டாம். சொல்லி என்ன ஆகப் போகிறது.?

இரண்டு வருடங்கள் ஓடிவிட்டன. என்ன ஆச்சுன்னு தெரியலை.

சேர்மனும் டைரக்டரும் ஒருவரை ஒருவர் கட்டி அணைத்து ஏதோ புரிதலில் தவறு ஏற்பட்டு விட்டது. எங்கள் இருவரையும் இனிமேல் எப்போதும் யாராலும் பிரிக்க முடியாது. ஈருடல், ஓருயிர் என்னென்னமோ டயலாக் விட்டார்கள். இருவரும் ஒத்துக்கொண்டு கைகுலுக்கி போய்விட்டார்கள். இரண்டு டிவிக்களிலும் மாற்றி மாற்றி காட்டிக் கொண்டிருந்தார்கள்.

மறுநாள் பேப்பரில் இரண்டு டைரக்டர்களும் சேர்ந்து விட்டதாகவும், இரண்டு டி.விக்களையும் தொடர்ந்து நடத்திக் கொள்வதாகவும், இன்னும் இரண்டு நாட்களில் எல்லா விஷயங்களையும் பேசி முடிவு செய்வதாகவும் அறிவித்தார்கள்.

“சண்முகம் உன்னோடு பேசணும். மிகவும் அவசரம்”. வேலு அழைத்தான். “உடனே ஹோட்டலுக்கு வா.”

“சரி வர்ரேன்.”

“சண்முகம், என்னை வேலையிலிருந்து தூக்கி விட்டார்கள். உங்க சேர்மன் அவர் டிவி யிலிருந்து வெளியில் போன என்னைத் தூக்க வேண்டும்” என்று கண்டிஷன் போட்டாராம்.

சண்முகம் லேசான புன்னகையுடன், “தெரியும். எனக்கு தெரியும். இன்னொண்ணு தெரியுமா? உங்க டைரக்டர் தான் கூப்பிட்டபோது வரவில்லை என்று நான் சொன்னதற்காக என்னைத் தூக்கணும்னு பதில் கண்டிஷன் போட்டார்”

“:அப்படியா?”

“சேர்மன் என்னைக் கூப்பிட்டு நீ என்னை புரிஞ்சுப்பே எனக்கு வேற வழி இல்லை.. நீ எப்போவேணாலும் எங்கிட்ட வரலாம் என்ன உதவி வேணுமானாலும் கேக்கலாம்”.ன்னு சொன்னார். நீங்க தொழில் கத்துக் கொடுத்தீட்டீங்க எனக்கு அது போதும் நான் பொழைச்சுப்பேன் ன்னு சொல்லிட்டு வந்துவிட்டேன்”

“என்ன சண்முகம் உனக்கு பதட்டமாக இல்லையா?”.

“இல்லை. அவர்கள் வேறே ஜாதி.. நாம வேற ஜாதி.. அவர்கள் பணக்கார ஜாதி. பணத்திற்காக, அதிகாரத்திற்காக எதையும் விடுவார்கள்.. நாம மட்டும்தான் உறவுக்காக எதையும் விட மாட்டோம்.. இருவரும் சேர்ந்து வேலை தேடுவோம். உலகம் பெரியது. எத்தனையோ டிவி சேனல்கள்.”

## எல்லோரும் நல்லவரே

ஐ. டி. மீட்டிங் நடந்து கொண்டிருந்தது.

“அவர் விசாரணையில் வேறெதாவது புதியதாக கிடைத்ததா?” என்று உயர் அதிகாரி கேட்டார்.

“வேறொன்றும் கிடைக்கவில்லை. திரும்பத் திரும்ப அதையே தான் சொல்லிக்கொண்டு இருக்கிறான். இவன் ஸ்டேட்மென்டை வைத்து நாம் அவரை ரெய்டு பண்ண முடியாது. பி எம் எப் எம் அப்ரோச் பண்ண இந்த ஓரல் எவிடென்ஸ் நிச்சயமாய்ப் போதாது. ஆனால் அவரை விசாரணை பண்ணியே ஆக வேண்டும். இவன் எல்லா டீலிங்கிலும் ஏதோ ஒரு லிங்கில் அவர் இருக்கிறார்”. என்றார் ஜூனியர் அதிகாரி

“ஹலோ பாய்ஸ் ஹவ் இஸ் இட் ப்ராகிரஸிங்?” மேலதிகாரி ஆவலுடன் கேட்டார்.

“ஒன்றும் இல்லை.. திருப்பி திருப்பி ஒரே புள்ளியில் நிற்கிறோம்.. எப்படி மேலே கொண்டுபோவது?என்று வழி தெரியாமல் நிற்கிறோம்.”

“நான் உங்களுக்கு ஒரு பிளஸன்ட் சர்பிரைஸ் கொடுக்கப்போகிறேன்..”

“எந்த சர்பிரைஸும் எங்களுக்கு சந்தோஷத்தை கொடுக்காது. சுற்றி சுற்றி வருகிறோம். உள்ளே போக கான்கிரீட் எவிடென்ஸ் கிடைக்கவே இல்லை இந்த ஓரல் எவிடென்ஸை வைத்துக்கொண்டு பி. எம்., எப் எம். கிட்ட போக முடியாது. அவர் பாவம். இதிலே ஏதாவது சொதப்பினால் ஆப்போசிஷன் அவரைக் கிழிச்சிடுவாங்க.

“அப்படியா? அப்படி என்றால் நான் கொடுக்கப்போவது நிச்சயமாய் பிளசன்ட் சர்பிரைஸ் தான். ராகுல்காந்தி சொல்வதைப் போல எக்ஸ்பிளோடிங் சர்பிரைஸ்.”

“ஆ! அப்படியா? ஏல்லோரும் வாய் பிளந்து அதிர்ச்சியை கொட்டினார்கள். என்ன சார் பிளீஸ் இன்னும் சஸ்பென்ஸ் வேண்டாம். சீக்கிரம் சொல்லுங்கள்.”

“இந்த லெட்டரைப் படிங்க.”

லெட்டரைப் படித்த அனைவரும் மிரண்டார்கள்.

“என்ன சார் இது நம்பவே முடியலையே ! இப்படியும் நடக்குமா?

“நடந்திருக்கே. அமைதியாய் சொன்னார்”.

“நாளைக்கே இந்த லெட்டர் நான் எழுதவே இல்லை என்று பல்டி அடித்தால் நம்ப பாடு ரொம்ப திண்டாட்டமா ஆயிடும்.”

“பையன் செம உஷார்.. படிச்ச பையன். போன் நம்பர் கொடுத்திருந்தான்.. நான் அவன் நம்பருக்கு போன் பண்ணி ரெக்கார்டு பண்ணிட்டேன்.. அவன் 'கவலையே படாதீங்க சார். உங்க கவலை எனக்கு புரிகிறது. நான் ரொம்ப ஸ்ட்ராங்';னு சொல்லிட்டான்”

லெட்டரை புதிதாக வந்த ஏ. டி. படித்தார்.

“ வருமான வரித்துறை இயக்குநர் அவர்களுக்கு,

நான், சேகர் முதன்மை செயலர் மகன் சுயநினைவுடன் எழுதும் கடிதம்.

இரண்டு மூன்று நாட்களுக்கு முன்பு எனது காலேஜில் எனது நண்பர்கள் இரண்டு பேர்கள் வரவில்லை.

மறுநாள் வந்தவுடன் ஏன் வரவில்லை என்று காரணம் கேட்டேன்.

பணம் எடுக்க ஏ. டி. எம்மில் நின்று நின்று நேரம் போனதாகவும் கடைசியில் ஏ. டி. எம் கிட்ட செல்லும் போது நோ கேஷ் என்ற செய்தி வந்ததாகவும் செலவுக்கு காசு இல்லை என்று வருத்தத்துடன் சொன்னார்கள்.

எனது அம்மாவிடம் எனது நண்பர்களுக்கு பணம் எடுக்க முடியவில்லையாம். நான் பணம் கொடுக்கிறேன் என்று சொல்லி விட்டேன். 10, 000 ரூ. இருந்தால் கொடு என்றேன்.

அம்மா சரி இரு என்று அறைக்கு சென்று ஐந்து 2000 நோட்டுகள் எடுத்து வந்தார்கள். அவர்கள் பணம் எடுக்கும்போது தற்செயலாகப் பார்த்தேன் 2000 ரூபாய் கட்டுக் கட்டுகளாக இருந்தன. 1-5 நம்பர்கள் இருந்தன. நாங்கள் பணம் மற்றும் நகை வைக்கும் பெட்டி அது.

ஏனக்கு மற்றவர்கள் ஒரு 2,000 ரூபாய்க்கு அவதிப்படும்போது கட்டுக் கட்டுகளாக்க இவ்வளவு பணம் வைத்திருப்பது சரியாகப் படவில்லை. நீண்ட யோசனைக்குப் பின்பு உங்களுக்குக் கடிதம் எழுதுகிறேன்

ஏங்க அப்பாவிடம் நான் கேட்க முடியாது. அவர் எனக்கு ஒன்றும் தெரியாது என்று அடக்கி விடுவார். அவரை எப்படி டீல் செய்ய வேண்டும் என்று உங்களுக்குத் தெரியும். ஏனக்கு வேண்டியது எங்கள் வீட்டில் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் பணம் வெளியில் வர வேண்டியது.

ஆவன செய்வீர்கள் என்று எதிர்பார்க்கிறேன். எனது அப்பா பெரிய அதிகாரி என்று விட்டுவிட்டால் ஆண்டவன் நம் எல்லோரையும் காக்கட்டும்.

சேகர் (3597 3253 20)

பி.எம்., எப்.எம்க்கு பேக்ஸ் பறந்தது. ஏற்கனவே சேர்த்து வைத்திருக்கும் தகவல்கள் பிடிபட்டவரின் வாக்குமூலம், பையனின்

கடிதம், பையனுடன் பேசிய வாய்ஸ்மெயில் அசுர வேகத்தில் பறிமாறிக்கொள்ளப்பட்டன. இந்த விஷயம் பற்றி யாரும் வாய் திறக்கப்படாது என்று கட்டளை பிறப்பிக்கப் பட்டது.

காலை 5 மணி எல்லா சேனலிலும் முதன்மை காரியதரிசி வீடு, உறவினர் வீடு என்று ஒரே சமயத்தில் ரைடு நடந்தது என்று அறிவித்தது.

பி. ஜே. பி. அரசு மற்றைய ஸ்டேட் விஷயத்தில் தலையிடுகிறது. அவர் இந்த ஜாதி. அதனால் தான் இந்த ரைடு ஏதேதோ கூக்குரல்கள்.

நேரம் செல்லச்செல்ல 10 கோடி புதிய நோட்டுகள், 15 கோடி கிரிக்கெட் ரன் மாதிரி வந்து கொண்டே இருந்ததில் கூச்சல் போட்டவர்கள் எல்லாம் கப்சிப்.

அடேங்கப்பா எவ்வளவு தங்கம்

அடுத்த நாள். பேப்பரில் அவர் முன்னால் முதன்மை காரியதரிசி ஆனார். அவர் அவன் ஆனான்

சேகர் கூட அதிர்ந்து போனான். அவனுக்கு தெரியாது தன்னுடைய கடிதம் தான் வண்டியில் ஏற்றப்பட்ட கடைசி வைக்கோல் என்று.

ஏல்லா அலுவலகங்களும் சேகர் எழுதிய கடிதத்தை ஒரேயடியாய் மறைத்து விட்டார்கள்.

முதன்மை காரியதரிசி வீட்டில் எப்படி அவ்வளவு பணம் இருந்தது. அதுவும் புது நோட்டுகள். அவர் பாவம் எந்த மந்திரியுடையதோ?

இல்லை இல்லை அவர் அடுத்த ஊர் கலெக்டராக இருந்த போதே அவ்வளவு பணம் பண்ணினார்.

முதன்மை செகரடரி. முதல் மகன், மாமனார் வீடுகளில் சோதனை தொடர்ந்தது.

வீட்டில் மரண அமைதி நிலவியது. ஏதாவது வாங்க வேண்டும் என்றால் சேகர் தான் செல்ல வேண்டும். புதவி போனவுடன் ஊழியர்கள் செக்யுரிட்டி எல்லாம் விலக்கப்பட்டது. சேகர் தான் ‘ஒன்றும் புரியாமல் ஏதோ செய்து விட்டோமோ?’ என்று மனதிற்குள் குமுறிக்கொண்டு இருந்தான்.

அவர்கள் அவ்வளவு பெரிய ஆபிசர்கள். தன்னுடைய கடிதத்தின் மேல் அவ்வளவு பெரிய ஆக்சன் எடுத்து மாட்டார்கள் என்று அவனே சமாதானம் செய்து கொண்டான். ஆவர்கள் எப்படியோ எல்லா விஷயங்களையும் சேகரித்து விட்டு இருப்பார்கள். லெட்டர் போட்ட இரண்டாம் நாள் ரெய்டு வர சான்ஸே இல்லை. அவனும் எதுவும் பேசவில்லை. யாரும் அவனுடன் பேசவில்லை. எந்திர கதியில் நாட்கள் நகர்ந்து கொண்டிருந்தன.

சேகர் வீட்டில் நிகழ்ந்த நினைவுகளால் ரொம்ப பாதிக்கப்பட்டு இருந்தான். காலேஜ் போக வேண்டாம் என்று அம்மா அப்பா சொல்லி விட்டார்கள். நண்பர்கள் உதவி ஏதாவது வேண்டுமா என்று கேட்டுக்கொண்டார்கள். வேண்டாம் தேவைப்பட்டால் நான் கேட்கிறேன் சுருக்கமாக முடித்த்துக்கொண்டான்

திடீரென போன் ஒலித்தது.

“ஹலோ யாரு?”

“சேகர்?”

“ஆமாம் நீங்க யாரு?”

“போன்ல பேச வேண்டாம். உங்க வீட்டுக்கு அடுத்த வீட்டுக்கு வர முடியுமா?”

“முடியாது. வேண்டாம் சார் எனக்கு பயமாக இருக்கு. அப்பா வர மாட்டார். நான் ஏன் வரணும்? நீங்க யாரு? எதுக்கு வரச்சொல்றீங்க? என் நம்பர் எப்படி கிடைச்சுது? உங்க நம்பரை போலீஸுக்கு

கொடுத்து இந்த நம்பரில் இருந்து ஒருத்தர் போன் பண்ணி என்னை வீட்டை விட்டு தனியா வரச்சொல்கிறார் என்று புகார் கொடுத்து விடு விடுவேன். மரியாதையா போனை கட் பண்ணுங்க".

"சேகர் அவசரப்படாதே. நூன் உன் நண்பன். ஒரே ஒரு க்ளு நான் ஐடி. டிபார்ட்மெண்ட்லேர்ந்து பேசறேன். உனக்கு தேங்ஸ் சொல்லச் சொல்லி உன்னைப் பாராட்டச் சொல்லி அனுப்பியிருக் காங்க.. நீ வெளியில் வா. உனக்காக கார் டபிள்யு ஏ. பி. 1222 செவர்லெட் நீல கார் நின்று கொண்டிருக்கும்.. அரை மணியில் திரும்பி விடலாம். கார் நம்பரைக் குறித்துக் கொள். உன் அம்மாவிடம் கார் நம்பரைக் கொடுத்து அதில் உன் நண்பனுடன் வெளியில் போய் அரை மணி நேரத்தில் வந்து விடுவதாக சொல்லி விட்டு வா. பயப்படாதே. கார் நம்பர் இருக்கு"

இன்கமிங் கால் நம்பரை ஒரு வெள்ளை பேப்பரில் எழுதினான். நண்பருடன் வெளியில் போவதாக அம்மாவிடம் சொன்னான்.

"ஏன் போறே? போய்தான் ஆகணுமா? அவசியமா? உனக்குத் தெரியாதா? வீட்டில் ஏகப்பட்ட பிரச்சனைகள்". என்றாள் அம்மா கவலையுடன்.

"கவலைப்படாதே அதற்காகத் தான் பிரண்ட் கார் நம்பர் போன் நம்பர் எல்லாம் எழுதியிருக்கேனே. வெளியில் வைட் பண்ணறான். நான் தான் உள்ளே வர வேண்டாம் என்று சொன்னேன்"

"சரி சீக்கிரம் வந்து விடு".

வெளியில் வந்து பார்த்தால் அடுத்த வீட்டு காம்பவுண்டு அருகில் நீல நிற சவெர்லெட் கார் நின்று கொண்டிருந்தது. அருகே பயந்து கொண்டே சென்றான்.

கார் கதவு அருகே நின்றான். நீல நிற ஸபாரி போட்ட ஒருவர் டிரைவர் சீட்டிலிருந்து இறங்கி "ஹை சேகர். பயப்படாதே" என்று சொல்லி டிரைவர் பக்கத்து சீட்டு கதவை திறந்து விட்டார்.

'குட் மார்னிங் சேகர் ரிலாக்ஸ் . பயப்படாதே. பீல் அட் ஹோம். நான் சந்திரசேகர். ஐ. டி. யின் ஆபிசராக இருக்கிறேன். குட்மார்னிங்" என்றார்.

பயம் இன்னும் போகவில்லை என்று தெளிவாக தெரிந்தது.

"இன்னும் நார்மலுக்கு வரவில்லை தெரிகிறது." சிரித்துக் கொண்டே சொன்னார். "நீ அப்பா அம்மா கிட்ட கடிதம் பற்றி சொன்னாயா?" நேரடியாய் கேள்வியை ஆரம்பித்தார்.

"இல்லை சார்."

"சரி . சொல்லாதே சொல்லவும் வேண்டாம். உன் கடிதம் பற்றி யாரிடமும் சொல்ல வேண்டாம். டிபார்ட்மென்டும் யாரிடமும் சொல்லாது. அதைப்பற்றிச் சொல்லிப் போகத்தான் வந்தேன்."

கொஞ்சம் தெளிவு பிறந்தது. பயப்படத் தேவையில்லை. அந்த தெளிவை முகம் காட்டியது.

"பிஎம் க்கு தெரியும். அவர் உன்னை பாராட்டச் சொன்னார். அந்த பாராட்டைத் தெரிவிக்கத்தான் இங்கு வந்திருக்கிறேன். அவர் நேரில் பாராட்டினால் அது பெரிய விஷயம் ஆகி விடும். ஆதனால் உனக்குச் சிக்கல் தான் வரும் என்பதினால், நான் வந்திருக்கிறேன்"

முழுத்தெம்பு வந்து விட்டது.

"நான் கேள்வி கேட்கலாமா சார்?"

"தாராளமாக நீ எனக்கு வி.ஐ.பி. என்ன வேண்டுமானாலும் கேட்கலாம்".

“நான் செய்தது சரியா தவறா?” என்று எனக்குப் புரியவில்லை. அப்பாவை நினைத்தால் பயமாக இருக்கிறது. அப்பாவை ஜெயிலில் போடுவார்களா? இல்லை. பெரிய தண்டனை தருவார்களா?

அதெல்லாம் பயப்படத் தேவையில்லை. “இது ஒன்றும் கொலைக்குற்றம் இல்லை.. உங்கப்பா அரசியல்வாதிகளின் கையில் பொம்மை.. நாட்டில் இதை விட ஊழல் செய்தவர்களையெல்லாம் என்ன செய்ய முடிந்தது?”.

“இல்லை பி. எம். ரொம்ப ஸ்டிரிக்ட்.. மோசமானவர் என்று சொல்கிறார்களே”.

“பிஎம் ஸ்டிரிக்ட் தான். ஆனால் அவரால் சட்டத்தை மீறி ஒன்றும் செய்ய முடியாது.. உனக்குத் தெரியுமே. பார்லிமெண்டில் குண்டு வைத்தவன் . ராஜீவ் கொலையை செய்ய உதவி செய்தவன், கேஸ் நீண்டு கொண்டே போகும். அதிகமாகப் போனால் கொஞ்சம் சொத்து போகும். அவ்வளவு தான்”.

“சொத்து போனால் பரவாயில்லை”.

“என் கார்டு தருகிறேன். நீ எப்போது வேண்டுமானாலும் என்ன உதவி வேண்டுமானாலும் என்னை தொடர்பு கொள்ள எனக்கு போன் செய்யலாம்”.

“ரொம்ப தாங்க்ஸ். கார். அப்பா அவ்வளவு மோசமானவர் இல்லை. சொத்து, பணம் மேல் யாருக்குத் தான் ஆசை வராது”.

“பரவாயில்லை தத்துவம் பேசுகிறியே?”

“நாட்டில் நிறைய பேர்கள் இந்த மாதிரி இருக்கிறார்கள். பணம் சொத்து வேணும் தான். நேர்மையான வழியில் வரணும்”.

“எப்படி சார் முடியும்? அரசியல்வாதிகள் நினைத்தால் யாரை வேண்டுமானாலும் எங்கேயும் டிரான்ஸ்பர் செய்யலாம். அவர்களுக்கு குடும்பம், குழந்தைகள் படிப்பு எல்லாம் இருக்கே. அவரை அனுசரித்துப் போனால் தொந்தரவும் கிடையாது. பணம், செல்வாக்கு எல்லாம் கிடைக்கும்”.

“அப்பா இவ்வளவு விஷயம் தெரிந்து வைத்திருக்கிறாயே. உன்னைப் பற்றி தீர்மானித்து உன்னை அரசியலுக்கு வர ஆசையா என்று கேட்கச் சொன்னார். நாட்டில் படித்தவர்கள், நேர்மையானவர்கள், அரசியலுக்கு வர வேண்டும் என்று பிளம் ஆசைப்படுகிறார்”.

“சார் அவர் அவ்வளவு ஆசைப்படும் போது நான் வேண்டாம் என் கூட படிக்கும் மணி என்கிற மாணவன் தான் என்னை விட பொருத்தமானவன்”.

“அப்படியா”,

ஆமாம் சார். நான் சராசரி பணக்கார அப்பாவின் பிள்ளைகள் போல் ஸ்கூலில் படித்தேன். அண்ணா யூனிவர்ஸிடியில் சேர்ந்தேன். டிப்ளமோ படித்த மணி காலேஜில் சேர்ந்தான். தந்தை இழந்த அவன் ராமகிருஷ்ண மிஷனில் படித்து வேலை பார்க்கும் இடத்தில் அவன் ஆர்வத்தையும் குணத்தையும் பார்த்து அவன் முதலாளி காலேஜில் சேர்த்து விட்டார். அவன் தான் எங்களுக்கு வாழ்க்கையில் கஷ்டத்தைப் புரிய வைத்தான். சீட் ஹாஸ்டல் (ஆயுள் தண்டனைக் கைதிகளின் குழந்தைகள் படிக்கும் இடம்) நரிக்குரவர்கள் குழந்தைகள் படிக்கும் இடம் என்று எத்தனையோ ஆதரவற்ற குழந்தைகள் படிக்கும் பள்ளிக்குக் கூட்டிச் சென்று இருக்கிறான். முதலில் ஜாலிக்காகக் கூட போனோம். அந்த சம வயது சிறுவர்கள் நிலையைப் பார்த்து அவர்களுக்கு எதாவது செய்ய வேண்டும் என்று தோன்றியது. அவர்களுக்கு கொடுக்கும் சிறு சிறு பரிசுகள் கூட அவர்களுக்கு

அவ்வளவு சந்தோஷத்தைக் கொடுத்ததைப் பார்க்க எங்களுக்கு இன்னும் செய்யவேண்டும் என்று தோன்றியது.. மணிக்கு நண்பர்கள் எல்லாம் நன்றி சொல்லும்போது அவன் விவேகானந்தர் சொல்படி 'உதவி பெற்றவர்களுக்கு தான் நாம் எல்லோரும் நன்றி சொல்லவேண்டும். அவர்கள் நமக்கு உதவ ஒரு வாய்ப்புக் கொடுத்து இருக்கிறார்கள்'என்பான். அவனிடம் தொடர்பு காரணமாகவே எவ்வளவு பேர் நாட்டில் மணிக்கணக்கில் 2000 ரூ நோட்டுக்காக காத்திருந்தும் அதிலும் சிலர் மயக்கமாகி கீழே விழுந்து இறக்கும் இந்நேரத்தில் கட்டுக்கட்டாகப் பணத்தை வைத்திருப்பது எவ்வளவு பெரிய குற்றம்? என்று எனக்குப் பட்டது."

அவன் அடிக்கடி சொல்லும் ராம கிருஷ்ண மிஷின் பொன்மொழிகள்.

1. தேவைக்கு மேல் அதிகமாக வைத்திருப்பதும் ஒரு வகையில் திருட்டுதான்.
2. பயமே பலவீனம்.

"சரி உனக்கு டயம் ஆகி விட்டது."

கார் வீடு நோக்கி திரும்பியது..

"அந்த பையனை என்னை வந்து பார்க்கச் சொல்." இன்னொரு கார்டு கொடுத்தார்.

ஐந்து வருஷ ஜெயில் தண்டனை தீர்ப்பாகி விட்டது. சொத்துக்கள் ஓரளவு போய் விட்டது.

சேகர் போன் பண்ணினான் "சார். எங்க அப்பாவிற்கு 5 வருஷம் ஜெயில். நான் என்ன பண்ணறது சார்".

"ஒண்ணும். பண்ண வேண்டாம். ஐந்து வருஷம் போகி விடும். உங்க அப்பாவிற்குத் தெரியும். அப்பீல் செய்வார். சிறைக்

கைதிகளுக்குப் படிப்பு சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறோம். அதனால் அவருக்கு கஷ்டம் இருக்காது. அவரை நீங்கள் அடிக்கடி பார்க்கலாம்.. அதற்கு ஏற்பாடு செய்கிறேன்"

அவன் அம்மா தங்கை மற்றும் சில உறவினர் போய்ப் பார்த்தார்கள். எல்லோரும் அழுதார்கள். அப்பா "நான் உங்களை ஒரு கேள்வி கேட்கலாமா?" அழுகைகளுக்கு நடுவில் விசும்பினான் சேகர். 'வேண்டாம்' அப்பாவின் பதில் எல்லோரையும் அதிர்ச்சிக்கு உள்ளாகியது.

"நீங்கள் இப்போது போகலாம். ஜாக்கிரதையாக இருங்கள். சேகர் நீ எதையும் மனதில் வைத்துக்கொள்ளாதே. எல்லாம் நன்றாகவே முடியும்.. நன்றாக படி. படிப்பில் மட்டும் கவனம் செலுத்து. . மனைவியிடம் விடுமுறைக்கு உன் அண்ணன் வீட்டுக்கு போய் விடு. ஒரு மாறுதலாக இருக்கும். என்னை பற்றிக் கவலை வேண்டாம். நான் சீக்கிரம் வந்துவிடுவேன்"

ஐ. டி. அலுவலகத்திலிருந்து செகரடரி கீழ் வேலை செய்த பழைய நண்பர் ஒருவர் பார்க்க வந்திருந்தார்.

"சார். எப்படி இருக்கீங்க? நான் ஒண்ணு சொல்லப் போறேன். நீங்க அதிர்ச்சி அடையக் கூடாது. டாப் சீக்ரெட். சொல்லலாமா வேண்டாமா என்று போராடி முடிவில் எப்படியும் உங்களுக்கு தெரியப்படுத்தினால் உங்க கேசுக்கு உதவியா இருக்கும் என்று நினைத்து உங்களிடம் சொல்ல வந்திருக்கிறேன்".

"தாங்க்ஸ் சொல்லுங்க"

"உங்க பையன் டிபார்ட்மெண்ட்க்குக் கடிதம் போட்டான். உங்க மேலே நடவடிக்கை எடுக்க உங்க பையன் கொடுத்த கடிதம் தான் உதவியது..

செகரடரி புன்சிரிப்புடன் "எனக்கு முன்னமே தெரியும். அவன் அந்த சமயத்தில்ரொம்ப டிஸ்டர்ப்பாக இருந்தான் அவன்பிரச்னை என்ன என்று கேட்க முடியவில்லை. அவன் ஏதாவது ஏடாகூடமா பண்ணிக்கிடுவானோ என்று பயந்து -அவன் ரூமில் காமிரா பிக்ஸ்பண்ணி இருந்தேன் அவனை முழுவதுமாக வாட்ச் பண்ணிக் கொண்டிருந்தேன்".

"பின்னே ஏன்சார் அவனைத்தடுக்க வில்லை?"

"நான் நல்ல வழியில் செல்லவில்லை என்று எனக்கே தெரியும். என்னுடைய அடுத்த தலைமுறை நல்லதாக வருவது பற்றிஎனக்கு பெருமை அதிகம். ஒரு சின்ன வேண்டுகோள். எனக்கு என் பையன் செய்த வேலை பற்றி முன்னமே தெரியும் என்ற விஷயத்தை தயவுசெய்து யாரிடமும் சொல்ல வேண்டாம் அவனைப் பொருத்த வரை அவன்செய்தது அவனைத் தவிர யாருக்கும் தெரியாது"

முன்னாள் சீப் செகரடரி ஜெயிலுக்கு போனார்.. அப்பீல் எதுவும் செய்யவில்லை..

காவலர்கள் அவருக்கு மரியாதை செலுத்தி," சார்.., உங்களுக்கு இங்குள்ள கைதிகளுக்கு ஆங்கிலம், கம்ப்யுட்டர் எல்லாம் சொல்லிக் கொடுக்க உத்தரவு ஆகியிருக்கிறது."

முன்னாள் செகரடரி சிரித்தார்.

"வேண்டாம். ஏன்னை இவர்களுக்கு குருவாக இருக்கச் சொல்கிறீர்கள். குருவுக்கு ஒரு தகுதி உண்டு. அதை நான் இழந்து விட்டேன். உத்தரவில் எனக்கு சம்மதம் இல்லை. நான் சாதாரண கைதியாய் இருக்க விரும்புகிறேன். தயவு செய்து அரசாங்கத்திடம் தெரிவித்து விடுங்கள்".

காவலர்கள் கண்களில் ஜலம் பனித்து மெய் மறந்து நின்றார்கள்.

**எஸ். வெங்கட்ராமன்**

## கதாநாயகன்

“என்னங்க, கல்யாணம் இன்னும் இரண்டு மாதம் தள்ளிப் போடணும்னு சொல்றீங்க” செல்லமாய் சினுங்கினாள் செல்வி. -

“என்ன செல்வி இரண்டு மாதம் தானே. சினிமா காதலர்களைப் பார்த்ததில்லையா? கதாநாயகி நாயகனுக்காக வருடங்கள் காத்திருக்க வில்லையா? அதுவும் எதற்காக? என் தந்தைக்கு நான் ஒரே மகன். அவர் ஆசைப்படி அவர் தலைவர் தலைமையில் நடத்த ஆசைப்படுகிறார்.” செல்வம் கெஞ்சும் பாவனையில் சொன்னான்

“தலைவர் தான் ஏக பிசியாய் இருக்கிறாரே. அவருக்கு ஏன் இந்த கல்யாண வேலையெல்லாம்” –செல்வி அலுத்துக் கொண்டாள்.

“தலைவருக்கு இதெல்லாம் வேண்டாம் தான். தொண்டர்கள் தான் தலைவரை எதிர்பார்க்கிறார்கள். என் தந்தைக்கு தலைவர் மேல் ஒரு பாசம், அன்பு, மரியாதை, அவருடைய ஆசை என் திருமணம் தலைவர் தலைமையில் தான் நடக்க வேண்டுமாம். ஏதோ ஆசைப்படுகிறார் . அந்த தலைவர் இனிய தமிழில் நன்றாக பேசுவார். அவர் பேச்சு என்றால் எனக்கும் பிடிக்கும். அப்பாவுக்கும் சந்தோஷம் என்று ஒத்துக்கொண்டேன். இரண்டு மாதம் தானே இல்லை - அவசரமா. உனக்கு? அவ்வளவு அவசரம் என்றால் சொல்” என்று சொல்லி கள்ளத்தனமாக அவளைப் பார்த்தான் செல்வம்

“அப்படி இல்லை. கல்யாணம் என்றால் இனிக்கும் நினைவுகளுடன் முடித்து விட வேண்டும். அப்போது தான் ஒரு திரில். நாளைக்கு, நாளைக்கு என்று தள்ளிப்போட்டால் அதுவும் சோ சோ ன்னு ஆகிவிடும்.” சினுங்கினாள் செல்வி

“இன்னும் 60 நாள் இருக்கு. 59 நாள் இருக்கு என்று ‘சாட்டலைட் கவுன்ட் டவுன்’ மாதிரி எண்ணிக் கொண்டிருக்கலாம். சரி இன்னும் 60

நாள் தான் இருக்கிறது. இந்த தடவை தலைவர் டயம் கொடுத்து விட்டார். அவருக்கு செலுத்த வேண்டிய 5000 ரூ அனுப்பி விட்டோம்.”

“சரிங்க. நீங்க என்ன நான் சொன்னாக் கேட்கப் போறீங்களா? நாங்க பெண் பிள்ளை தானே? . பெண்ணுக்கு உரிமை எல்லாம் பேச்சளவில் தானே. தள்ளிப்போடுவதற்கு முன்னால் எங்களைக் கேட்டீர்களா? எல்லாம் ஏட்டுச்சுரக்காய் தான்”.

“என்ன செல்வி? நீயும் புரியாதபடி பேசறே எலெக்ஷன் வந்துடுச்சு. தேர்தல் வந்திட்டா தலைவருக்கு எவ்வளவு வேலை இருக்கு? எத்தனை பிரச்னை? எனக்குக் கூட கோபம் தான் வந்தது. முதலில் ஒத்துகிட்ட தலைவர் எப்படி பேச்சு மாறலாம்னு? என்ன பண்ணறது அப்பா ஆசை, அவரும் கூட மதராஸ் போய் தலைவர் கிட்ட எவ்வளவோ சொல்லிப்பார்த்தார். உனக்கு அப்பாவின் நிலைமை தெரியும். பணம் கூட இல்லை. அவர் தலைவர்கிட்ட எவ்வளவோ கேட்டிருக்கிறார். தலைவர் கொஞ்சம்கூட விட்டுக்கொடுக்க தயாராயில்லை தேர்தல் வந்திருச்சு நான் புதிதாய் என்ன சொல்லணும். பணம், பணம், பணம் தான் வாங்கப் போறேன். நான் வரணும்னா ரூ.5000 கட்டி ஆபிஸில் டைம் கேளுங்க. கத்திக்கொண்டு உள்ளே சென்றார்.” செல்வம் பேச்சில் கொஞ்சம் கோபம் வருத்தம் தெரிந்தது

“என்னடி கார் வந்திருக்கு?” செல்வி அம்மா பாதிப்பேச்சில் வாயை பொத்திக் கொண்டாள்.

“வா தம்பி வா என்ன இவ்வளவு தூரம்”.

“இல்லேம்மா, நம்ம தலைவருக்கு இப்போது வர டயம் இல்லையாம். தேர்தல் வந்துட்டதனாலே டயம் பின்னாடி

எழுதுகிறோம்னு தந்தி வந்திருக்கு." செல்வம் பேச்சில் கொஞ்சம் வருத்தம் தெரிந்தது

செல்வி ரூமிலிருந்து எட்டிப்பார்த்தாள்.

"என்ன தலைவர்? என்ன கட்சி? பொதுக்கூட்டம்னு மணிக்கணக்கா மக்களைக் காக்க வைக்கிறாங்க. மண விழான்னா மாதக்கணக்கிலே மணமக்களைக் காக்க வைக்கிறாங்க" செல்வி குத்தலாகச் சொன்னாள்

"மாதக்கணக்கில்லை. நாள் கணக்குத்தான் நாளை எங்கப்பா நேராக சென்னை செல்கிறார். நானும் அவரோடே போறேன். சீக்கிரம் குறிச்சு வைச்சுடறேன். சரி. எனக்கு முக்கியமான வேலை இருக்கு. உங்ககிட்டச் சொல்லிப் போகலாம்னு வந்தேன்."

"தம்பி, இவ்வளவு தூரம் வந்து இருக்கே. காபி சாப்பிடாமல் போனா எப்படி." ஒரு டம்ளர் காபியுடன் வந்து சேர்ந்தாள். செல்வியின் தாய்

"தேங்க்ஸ்"

காப்பியை ஒரே முழுங்கில் காலி செய்துவிட்டு செட்டியார் வீட்டுக்கு பறந்தான்.

"என்னப்பா உன் கல்யாணம் எவ்வளவு தூரத்தில். உங்க அப்பா கூட சென்னை போய்த் தலைவர் கிட்டே தேதி வாங்கிட்டுவரதாகச் சொல்லிப் போனாரே தேதி கிடைத்ததா?" என்று செட்டியார் கேட்டார்

"அதை என் கேக்கிறீங்க. தலைவர் தேர்தல் வரதாலே இன்னும் 5000 கூடக் கட்டணும்னு கறாராகச் சொல்லிவிட்டார் அப்பா எவ்வளவோ கெஞ்சி பார்த்தார் ஒண்ணும் நடக்கிறதாக தெரியல்லே நான் இப்போ உங்ககிட்டே வந்ததே 5000 பணம் வாங்கத்தான் அப்பா

உங்க கிட்டேக் கேட்டு வாங்கி பேங்க்கிலே டி.டி வாங்கி அனுப்பச் சொல்லி இருக்கார்”

“பணம் தரேன் நீ இப்போ டி. டி எடுக்கவேண்டாம். அப்பாவிடம் கொடு அவர் எடுக்கட்டும் என்றார்” செட்டியார் சொல்லிவிட்டுப். பணம் கொடுத்து விட்டார்

மறுநாள்

“டேய் நீ போய் ட்ராப்ட் எடுத்து வாடா” செல்வம் அப்பா அனுப்பினார்.

“ஏன் அப்பா, நாமே மதறாஸ் போய் பணத்தைக் கொடுத்து விட்டுத் தலைவரையும் நேரில பார்த்துத் தேதி கேட்டு வந்து விடலாமா?”

“சரி அப்படியே செய்து விடலாம். அப்படியே மதராஸில் உள்ள உன் சித்தப்பா, மாமாவிடம் நேரிலே போய் அழைத்து வரலாம். ராத்திரி பஸ்ஸில் போய்விடலாம்.”

செல்வத்திற்கு சந்தோஷம் தான். வீடியோ கோச்சில் போனால் இரண்டு சினிமாக்களும் பார்த்து விடலாம். மதராஸ் போனால் அப்பா, அங்கு சினிமா பார்க்காமல் வரமாட்டார்.

அடுத்த நாள் காலை சென்னை வந்து சேர்ந்தார்கள்.

பெரம்பூரிலிருக்கும் தம்பி வீட்டிற்கு போனாத் தம்பிக்கு ஒரே ஆச்சரியம்.

“என்ன அண்ணே. லெட்டர் வந்திச்சு. செல்வத்திற்கு கல்யாணமாமே? ஏன் அண்ணே நம்ம தங்கச்சி பெண்ணை விட்டுட்டே?” என்றார் சித்தப்பா.

“எல்லாம் அந்த கழுதையைக்கேள். அந்த கழுதைக்கு அவன் பார்த்த குட்டிச்சுவர் தான் வேணுமாம்”.

“ஏன் அண்ணே இந்த மாதிரி பேசுறீங்க. இந்தக் காலத்திலே பிள்ளைகளெல்லாம் எல்லாம் எப்படி எப்படியோ நடக்குது. பிள்ளைக்கு புடிச்சுப்போச்சு. சந்தோஷமா கல்யாணம் செய்து வைப்பீங்களா, அதை விட்டு விட்டு அவனைத் திட்டிக்கிட்டு இருக்கீங்களே.”

“நானா திட்டுறேன். அவன் கல்யாணத்திற்கு எத்தினை செலவு பண்ணுறேன். இப்போ கூட தலைவரைப்பார்த்து தேதி கேட்கத்தான் வந்திருக்கிறேன். ஏதோ ஒரு பெண்ணு அதிலே ஒண்ணும் குறைச்சலில்லை. அவங்க வீட்டிலே ஐயர் வைச்சு கல்யாணம் பண்ணணுமாம். அதுதான் எனக்கு அவ்வளவாக பிடிக்கவில்லை.”

“இதிலே நமக்குப் பிடிக்கிறதுக்கும், பிடிக்காததுக்கும் என்ன இருக்கு. உங்களுக்கு ஒரு கொள்கை மாதிரி மத்தவங்களுக்கும் இருக்கும். உங்களுக்கு பிடித்ததுதான் எல்லோருக்கும் பிடிக்க வேண்டும் என்று எதிர் பார்ப்பது தவறு. இப்போது எங்க வீட்டில் கூட குறை மாப்பிள்ளை நல்லாதான் இருக்கார். ஆனால் கல்யாணம் தான் நடந்த மாதிரி இல்லை. யாரையும் கூப்பிடமுடியவில்லை. அவசரக் கல்யாணம்அவங்க இரண்டு பேருக்கும் ஒருவரை ஒருவர் பிடிச்சிடுத்து ஏதோ மீட்டிங் வைச்சு யாரோ பேசி கல்யாணம் முடிந்தது”

“சரி தம்பி, நான் போய்த் தலைவரைக் கண்டு கொண்டு வந்துடறேன். நீயும் வர்ரியா.”

“நான் வரல்லே அண்ணே. நான் இப்போ முன்னே மாதிரி இல்லை.. எல்லாத் தலைவரும் நம்ம பேரைச் சொல்லி ஏமாத்தறாங்க. சமயத்துக்குத் தக்கபடி பேசிக்கிறாங்க.. இப்போ எல்லோரும் ஏமாத்தறாங்க. எல்லாத் தலைவரும் இப்படித்தான். கொள்கையும்

இல்லை. சேவையும் இல்லை நான் இனிமே ஏமாறத் தயாராக இல்லை. “

“என்ன தம்பி. இப்படி பேசிக்கிட்டு இருக்கே?”

“பழய மாதிரி இல்லே. அண்ணே உலகம் இப்போ ரொம்ப முன்னேறிக்கிட்டு டு வருது. டி.வி பார்த்துப் பழகிட்டேன். நம்மை வைச்சிருக்கிற மாதிரி எந்த ஊரிலேயும் தலைவர்கள் மக்களை முட்டாளாக வைக்கறது இல்லை.”

“சரி விடு. நான் போயிட்டு வரேன். நேரமானால் கவலைப்படாதே. கிளம்புடா, போகலாம்.” மகனை அழைத்துக் கொண்டு கிளம்பினார்.

தலைமை அலுவலகம் தொண்டர்களால் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. ஒரே கூட்டம்.. ரொம்ப சிரமப்பட்டு ஒரு வழியாக பணத்தை செலுத்தி ரசீது போட்டுக் கொண்டார்கள்.

தலைவர் உதவியாளர் தலைவர் அலுவலகத்துக்கு வரவில்லை. என்றும் தலைவர் செயலர் ஏதோ முக்கியமான விஷயத்தை வீட்டிலேயே விவாதித்துக் கொண்டிருப்பதாகவும், எப்போது வருவார்? என்று சொல்ல முடியாது என்றும் சொல்லிவிட்டார்.

அப்படி என்ன விசேஷமாம்?..

இந்த செயலர் ஒன்றும் தெரியாதவர் போல் சொல்கிறார்.

“வரும்போது போஸ்டர் பார்க்கவில்லையா?. கோடம்பாக்கத்தில் மீட்டிங் நடக்கிறது. தலைவர் கலந்து கொள்ளுகிறார். மீட்டிங்கில் எதிர் கட்சியை சேர்ந்த 20 பேர் நம் கட்சியில் சேருவதாக இருக்கிறது. அதற்கு ஏற்பாடு செய்து கொண்டு இருப்பார்” என்று விலக்கம் சொன்னார் செல்வத்தின் அப்பா.

“நம்ம கூட்டத்துக்கு போகலாம்மாப்பா?”

“போகலாம் இங்கு என்ன செய்யப் போகிறோம்? கோடம்பாக்கம் போய், அங்கேயே மேட்னி பார்த்துட்டு, மீட்டிங் போய் விட்டு வரலாம்”.

கோடம்பாக்கம் தியேட்டரில் மேட்னி ஷோ பார்த்துட்டு வந்து, டிபன் சாப்பிட்டு விட்டு நேரே மீட்டிங் நடக்கும் இடத்துக்கு வந்து விட்டார்கள்.

“மெட்ராஸ் மெட்ராஸ் தான் பா.”

“ஏண்டா, அப்படி சொல்றே?”

“எங்கே பார்த்தாலும் தோரணம், கொடிகள், தலைவருக்கு எவ்வளவு பெரிய கட் அவுட்டுகள், பணம் தண்ணி போல் செலவாகும் போல் இருக்கேப்பா.”

“தண்ணி போல் செலவு செய்தால்தான் தேர்தல்லே ஜெயிக்க முடியும். சரி. சரி மீட்டிங்லே ஒன்றும் பேசாதே, பலதரப்பட்ட ஆளுங்க வருவாங்க.”

சினிமாப் பாட்டுகள், வசனங்கள் ஒலி பெருக்கியில் வந்து கொண்டிருந்தன. சரியாக 7 மணிக்கு தலைவர் வந்துவிட்டார். என்ன அறிவிப்பு, கூச்சலைத் தொடர்ந்து தலைவர் வந்து விட்டார்.

தலைவர் வந்தவுடன் கூட்டம் அமைதியாய் இருந்து

“டேய், மேடையிலே பாரு, நம்ம ஊரு ராமய்யன் உட்கார்ந்திருக்கான்” என்று கிசுகிசுத்தார் செல்வம் அப்பா

“ஆமாம் பா, ராமைய்யன் நம்ம கட்சிக்காரன் இல்லேப்பா. அவன் எதிர்கட்சிக்காரன் இல்லை.”

“ஆமாம். எதிர்க்கட்சி உடைஞ்சு போச்சுல்ல அதிலே உள்ள் ஆட்களெல்லாம் ஆளுக்கு ஒரு கட்சியாய் போய் சேர்ந்துட்டாங்க. ராமய்யன் நம்ம கட்சிக்கு வந்திருக்கான் போலிருக்கு.”

“நம்ம ஊர்லே இதைப்பற்றி பேச்சு ஒண்ணும் இல்லை”

“சரி, விடு, மீட்டிங்கைப் பார்க்கலாம்”

கொஞ்சம் கொஞ்சமாகக் கூட்டம் சேர்ந்தது.

“இது என்னப்பா. அநியாயம் இது வரையில் இந்த ராமைய்யன் நம் ஊரில் நம்ம கட்சிக்கு எதிராக எவ்வளவு செய்திருக்கிறான்”

“நீ ஒண்ணும் பேசாதே. தேர்தல்னு வந்தா பலதும் நடக்கும். இன்னிக்கு அவன் எதிர்க்கட்சி வட்டச் செயலாளராக இருந்து நம்ம கட்சிக்கு வர்ரான். அவன்தான் கதாநாயகன்.”

“இது சரியில்லையப்பா. நம் கட்சியிலே முதல்லே இருந்து இருக்கோம். அவன் சீட்டுக்காக வர்ரான். தலைவர் சீட்டுத் தர்ரேன்னு சொல்லி அவரை வரச் சொல்லிட்டார்.”

“உனக்கு விஷயம் தெரியல்லை. அந்த ராமைய்யன் ஜாதியைச் சேர்ந்தவங்க நம்ப ஏரியாவிலே அதிகம். அதனாலேதான் தலைவர் அவனுக்கு டிக்கட் தர்ரார் நம்முடைய பார்ட்டி அதுதான் முக்கியம்.”

“இன்னொரு விஷயம் தெரியுமாப்பா. தலைவர் அவருக்கு ஏதோ பணம் கூட கொடுத்திருக்காராம். எல்லோரும் பேசிக்கிறாங்க.”

“இதெல்லாம் அரசியல்லே சகஜம் எல்லா பார்ட்டில்லேயும் இது நடக்கிறது தான்”.

“இது ரொம்ப அநியாயம் அப்பா. இதுவரையில் பார்ட்டிக்கு எதிரா வேலை செய்தவனுக்கு பார்ட்டி டிக்கெட்டும் பைசாவும்”

“இது தலைவருக்கு தெரியாதுன்னா நினைக்கிறே. அவன் ஆப்போசிட் பார்ட்டிலே வெயிட்டான ஆள். அவன் வந்தா இந்த ஏரியா ஆடும். அதுக்குத்தான் தலைவர் இவ்வளவு தர்ரார். நீ சின்ன பையன். உனக்கு ஒண்ணும் தெரியாது. மீட்டிங்கை பார். ரொம்ப பேசாதே, ரொம்ப பேர் நம்மளையே பார்க்கிற மாதிரி தெரியுது”

தலைவர் ராமய்யனைப் பற்றி ரொம்பப் புகழ்ந்து பேசினார். மீட்டிங் முடிஞ்சுக் கூட்டம் கலைந்து போறபோது ரொம்ப நேரமாகிவிட்டது. இருந்தாலும் தலைவர்கிட்டே போய் சண்முகம் அண்ணே வணக்கம் சொல்லிவிட்டு கார் ஒரமாய் நின்றார்.

“அடே சண்முகம், எப்ப அப்பா மதராஸுக்கு வந்தே?” என்றார் தலைவர்

சண்முகத்திற்கு உடம்பு சிலிர்த்தது. இத்தனை கூட்டத்திலும் தலைவர் தன்னை பெயரிட்டு விசாரித்தார் என்று. அருகிலுள்ள பையனிடம் அர்த்தமுள்ள சிரிப்பை உதிர்த்தார்.

அவர் கேட்ட தைரியத்தில் சண்முகம் “என்ன தலைவரே, எங்க ஊர் எதிர்க்கட்சி ராமய்யன் நம்ம பக்கம் வந்திருக்கான்.”

“அது எல்லாம் தான் இப்போ அரசியல்”

அவர் சொன்ன விதத்திலிருந்து அதற்குமேல் அவரை எதுவும் கேட்கக் கூடாதென்றும், அவர் கேட்டதையேத் தலைவர் விரும்பவில்லை என்றும் அழகாக எடுத்துக் காட்டியது.

சண்முகம் புரிந்து கொண்டு, “பையன் கல்யாணம் தலைவர்கிட்டே தேதி கேட்கணும்னு வந்தேன்.”

“ஆபிஸ்லே பணம் கட்டிடுங்க. அவங்ககிட்ட சொல்லி தேதி வாங்கிருங்க.”

“பணம் கட்டிட்டேன். தலைவர் சீக்கிரம் வந்தா நல்லா இருக்கும்”

“எனக்கு புரோக்ராம் சரியா நினைவுக்கு வரவில்லை. நான் செக்ரடரிக்கிட்டே சொல்றேன். பார்ட்டி ஒர்க்கைப் பார்த்துக்கங்கப்பா. இந்த தடவையும் ஜெயிச்சேயாகணும். சரிங்க, நான் வரேன் சண்முகம், ஏற்கனவே லேட்டாயிடுத்து. நான் இன்னொரு ஆளைப் பார்க்கணும்”..

“சரிய்யா”

“வணக்கம் ஐயா  நான் வரேன்.” சண்முகம் சொல்லி விடை பெற்றான். கிளம்பும் முன் ஒரு வணக்கம் மரியாதையை தெரிவித்தது..

“என்னப்பா, தலைவர் சீக்கிரம் வந்திருவாரா.?”

“நிச்சயமாய் வருவாரு. தேர்தல் கூட வந்திருச்சு. எல்லா ஏரியாவையும் கவர் பண்ணணும்பாரு”

சண்முகம் பையனுடன் கிளம்பினான். வீடியோ கோச்சும் கிடைத்தது. ஆனாலும் பையனுக்கு அவ்வளவு சுவாரஸ்யமில்லை என்று தெரிந்தது. ராமய்யன் கட்சிக்கு வந்த்ததா? தலைவர் உடனே வர ஒத்துக்கொள்ளாததா? புரியவில்லை. அதை பற்றி பேசாதிருப்பது நல்லது என்று இருவரும் மௌனம் காத்த்தார்கள்.

ஊர் வந்து சேர்ந்தார்கள்

மறுநாள் பேப்பரில் ராமைய்யன் கட்சியில் வந்து சேர்ந்தது கொட்டை எழுத்தில் தலைப்பு செய்தியாக வந்திருந்தது.

ஊரிலுள்ள கட்சித் தொண்டர்கள் சண்முகத்திடம் வந்து விசாரித்தார்கள்.

“என்ன அண்ணே? சென்னை போய்த் தலைவரைப் பார்த்து வந்தீங்களே? என்ன சொன்னார்? நம்ம ராமய்யன் விஷயம் கேட்டீங்களா?”

சண்முகம் எல்லோருக்கும் சொன்ன ஒரே பதில்

“தலைவர் பெரியவர். தேர்தல்லே எவ்வளவோ அனுபவம் உள்ளவர். அவர் செஞ்சா எல்லாம் சரியாய் தான் இருக்கும். “

செல்வியைப் பார்த்த போது “என்ன தலைவர் தேதி கொடுத்துவிட்டாரா?” என்று கேட்டாள்.

“இல்லை கட்சி அலுவலகத்தில் தேதி குறித்து தந்தி கொடுப்பதாகக் கூறிவிட்டார்கள்.”

“இது கேட்டுக்கிட்டு வருவதற்காக நீங்க இரண்டுபேர் போயிட்டு வந்தீங்களா?” அவள் சற்று பரிகாசமாகவே கேட்டாள்.

“உனக்கு ஒண்ணும் தெரியாது. அரசியல், கட்சின்னா இது என்ன எவ்வளவோ விட்டுக்கொடுக்கணும்.”

“சரி, சரி நமக்கு வேண்டாம் ஐயா. அந்த பெரிய விஷயம் எல்லாம்” பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டு “பார்க்கலாம். பார்க்கலாம் என்னை எவ்வளவு நாள் தான் காக்க வைக்கிறீங்கன்னுட்டு”. பறந்து சென்று விட்டாள்.

இரண்டு நாளில் தந்தி வந்தது. அடுத்த மாதம் முதல் வாரத்தில் தலைவர் வருவதாக இருந்தது.

செல்வியிடம் ஆவலோடு ஓடினான்.

தலைவர் வரும் தேதி நல்ல வேளையாக ஐயர் குறித்திருந்த நாளுடன் ஒத்து வந்தது.

“என்ன சண்முகம் ஒரு வழியாக தலைவர் வர ஒத்துக்கொண்டார் போல இருக்கு? செல்வம் வந்து சொன்னான். என்ன ஐயா தலைவர் இப்படி இரண்டு மாசம் இழுத்துட்டார்.” என்றார் செல்வம் மாமனார்

“அதை விடுங்க. தலைவர் வருகிறார் இல்லே. பின்னே என்ன, ஐயர் இந்த மாசம் சரியில்லை அந்த மாதம், சரியில்லைன்னு சொல்லி ஒட்டிருவார். அதெல்லாம் உங்களுக்கு சரியா இருக்கும். இப்போ எங்க தலைவருக்காக கொஞ்சம் நாள் தள்ளி போன பெரிசா பேசுறீங்க.”

“சரி தலைவரே உங்களோடு பேசி நான் ஜெயிக்க முடியுமா. நீங்க பேசியே பொளப்பை நடத்தறவங்க. “நான் வெள்ளிக்கிழமை காலை 7.30 மணியிலிருந்து 9.30 மணிக்குள் கோயில்லே கல்யாணம் முடிச்சுட்டு, சரியா உங்க வீட்டுக்கு 9.45 வந்துடறேன். உங்க வீட்டிலே மீட்டிங் கல்யாணம் 10.00 மணிக்கு தானே. நீங்களும் கோவிலுக்கு சரியா 8.00 மணிக்கு வந்துடுங்க.”

“சரி, சரி, நான் வரேன். நீ சம்பந்தின்னு சொல்லிட்டு உட்கார்ந்துடாதே. நீயும் மீட்டிங்க்லே கடைசிவரை இருக்கணும்.”

“என் பொண்ணையே கொடுக்கிறேன். நான் வந்து இருக்க மாட்டேனா?. அதெல்லாம் எனக்கு சொல்லவே வேண்டாம். நான் ஏதாவது மீட்டிங்குக்கு உதவி செய்யணுமா? அதை மாத்திரம் சொல்லு.”

ஊரே போஸ்டரில் நடுங்கியது. திரும்பிய இடமெல்லாம் 3 கலர் போஸ்டர்கள். ராமய்யன் தனியாகத் தலைவரை வரவேற்க போஸ்டர்களால் ஊரையே நிரப்பி இருந்தான்.

செல்வி கூட செல்வத்திடம் “என்ன நம்ம கல்யாணத்துக்காக ஊர் செவருக்கெல்லாம் புது டிரஸ் மாட்டி விட்டிருக்கீங்க” என்று சொல்லி சிரித்தாள்.

ராமய்யன் கல்யாணத்திற்கு இரண்டு நாள் முன்னாடி இரண்டு அலங்கார வளைவு தெருவை அடைச்சுப் போட்டுட்டான். மற்ற பழைய தலைவர்களெல்லாம் புதிதாய் முளைத்த ராமய்யன் உற்சாகத்துக்கு முன்னே நிற்க முடியவில்லை.

கல்யாண நாளும் வந்தது.

7. 30 மணிக்கு கோவிலில் ஐயர் வைத்து கல்யாணம் நடந்தது.

“மாப்பிள்ளை, கையில் மஞ்சளும், அட்சதையும் எடுங்க”

“மாப்பிள்ளை பொண்ணு கையைப் பிடிச்சுக்குங்க”.

“மாப்பிள்ளை, சாமி கும்பிடுங்க”.

“மாப்பிள்ளை அம்மா அப்பா மாமா, மாமி பெரியவங்க காலிலே விழுந்து ஆசீர்வாதம் வாங்கிக்கங்க”

ஐயர் செல்வத்தை ‘டிரில்’ வாங்கிக்கொண்டிருந்தார்.

ஒரு வழியாக முடித்து, மாப்பிள்ளை கையில் தாலியை கொடுத்து பெண் கழுத்தில் மங்கள வாத்யம் முழங்க மந்திரம் சொல்லி தாலி கட்டச் செய்தார்.

மாப்பிள்ளை, பெண்ணைத் தாலி கட்டிய உடனேயே சண்முகம்

“டே செல்வம் புறப்படுடா. நேரம் ஆயிடுத்து தலைவர் வந்திருவார்”. பையனைத் துரிதப்படுத்தினார்.

ஐயர் “மாப்பிள்ளை, சாமி கும்பிட்டுட்டு போப்பா, ஒரு ஐந்து நிமிஷம்தான் ஆகும்”. ஐயர் விடாப்பிடியாய் கோவிலுக்குள் போய்ப் பூசாரியை கற்பூரம் காண்பிக்கச் சொல்லி மாப்பிள்ளையை வாழ்த்தி அனுப்பினார்..

வேனில் மாப்பிள்ளை, பெண், சண்முகம் அவர் மனைவி, அவர் தம்பி எல்லோரும் புறப்பட்டுப் போனார்கள்.

பெண்ணின் குடும்பம் தனியாக ஒரு காரில் பெண் அப்பா, அம்மா இன்னும் அவசரமாக யார் யார் போகணுமோ அவர்கள் எல்லாம் போனார்கள். சரியாக நேரத்திற்குப் போய்விட்டார்கள்.

தலைவர் வரவில்லை.

மேடையில் ஒரு ஒரமாக பெண்ணும் மாப்பிள்ளையும் நாற்காலியில் உட்கார வைக்கப்பட்டிருந்தார்கள். நடுவில் இரண்டு டேபிள்கள், அதற்கு ஒரு புறத்தில் 5 நாற்காலிகள் அதில் நடுவில் இருந்த நாற்காலி மட்டும் சற்று வித்தியாசமாக விசேஷமாகவும் இருந்தது.

ஒலிபெருக்கிக் கட்சிப் பாடல்களை அலறிக்கொண்டிருந்தது.

“தலைவர் ஊருக்கு வந்துட்டாரா”?

“இல்லை. வர்ர வழியிலே அங்காங்கே நம்ம தலைவரை மக்கள் பார்க்க ஆசைப்படுறாங்க. அதனாலே லேட் ஆகுது. ஆனால் வந்துடுவார். “

திடீரென “தலைவர் வருகிறார். தலைவர் வருகிறார்” ஒலிபெருக்கி கட்டிய ஆட்டோ கல்யாண வீட்டிற்கு முன்பு ஒரு ரவுண்ட் அடித்து உற்சாகத்தை கிளப்பியது.

“வந்தாச்சா?” ஒடிப்போய் ஆட்டோ டிரைவரை ஒருவர் கேட்டார்.

“இப்போ என்னய்யா தெலுங்கிலா சொன்னோம்?” – ஆட்டோ டிரைவர் குரலில் கோபம் தெளித்தது.

“அதுக்கில்லை. இது மாதிரி வர்ரார், வர்ரார்ன்னு 3 மணியா செல்லிக்கிட்டு இருக்காங்க” ஒரு தொண்டர். .

“தலைவர்னா 3 மணி என்ன, 3 நாள் காத்திருக்க வேணும்.. காத்திருக்க ஆள் இருக்காங்க”ஆட்டோ டிரைவர். .

“சரி இடத்தை காலி பண்ணு. எனக்கு வேலை இருக்கு.” ஆட்டோ விர்ரென்று கிளம்பியது.

தலைவர் – வாழ்க. தலைவர் – வாழ்க. தனிப்பெரும் தலைவர் – வாழ்க. ஏழை பங்காளன் – வாழ்க, கொள்கை சிங்கம் – வாழ்க, கொடைவள்ளல் – வாழ்க, கலியுக குமணன் – வாழ்க, புறநானூறின் புதுப்பதிப்பு – வாழ்க,

ஒரே வாழ்க திருமண கலவரம் அனைத்தையும் அடக்கிவிட்டது.

திடீரென இரண்டு அலுமினிய சிம்மாசனம் போல் உள்ள சிவப்பு வெல்வெட் சீட் அணிந்த சேர்கள் மேடையில் முளைத்தன.

“தலைவர் வந்துவிட்டார். தலைவர் வந்து விட்டார். “ அறிவிப்புகள் நின்றன..

சண்முகம் பந்தலுக்கு வெளியே வந்து நின்று கொண்டார். அவர் சம்சாரத்தையும் கூப்பிட்டார்

அவர் வர மறுத்துவிட்டார். “உங்களோட இந்த கூத்தை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள். என்ன அநாகரீகமா வாழ்க வாழ்கன்னு காது செவிடா மாதிரி கத்துறாங்க.”.

“அண்ணே வாங்க. அண்ணே வாங்க.”

“என்ன சண்முகம் லேட்டாயிடுத்தா? வழியெல்லாம் மக்கள் அவங்களை விட்டுடமுடியுமா? புடிச்சுக்கிட்டாங்க.” தலைவர் கிடைத்த வாய்ப்பில் தன பெருமையை சொல்லத் தவறவில்லை.

சண்முகம் ஒப்புக்கு சொன்னார். “எனக்கு தெரியாதுங்களா?. தலைவர்னா பல சிக்கல் இருக்கத்தான் இருக்கும். நீங்க வந்தது எனக்கு

பெரிசு எனக்கு இன்னிக்கு கிடைச்சுடுத்து. பெரிய விஷயம். நான் எவ்வளவு நாளா இந்த நிகழ்ச்சிக்குக் காத்து கிடந்தேன்?"

"டேய் . தங்கவேலு என்ன போஸ்டர் பிரமாதமாக அடிச்சுட்டே. தூள் கிளப்பிட்டே போ. "

தலைவர் புகழ்ந்தவுடன் தங்கவேலுக்கு தலைகால் புரியவில்லை. "அதெல்லாம் ஒண்ணும் இல்ல தலைவரே. ஏதோ என்னால முடிஞ்சது. இன்னும் கூட எனக்கு டபுள் சைஸ்லே போட்டு சுவரு புல்லா ஒட்டணும்னு ஆசை தான்." தங்கவேலு நாசுக்காக தன் பொருளாதார நிலைமையை எடுத்துரைத்தான்.

"ராமய்யன் எங்கேப்பா?"

"தலைவர் இந்த மீட்டிங்கை என்னை பாத்துக்கச்சொல்லி அடுத்த ஊரிலே ஏற்பாடு செய்ய போய்வி ட்டார்"

"சரி எலெக்ஷன் முடியட்டும்.. எலெக்ஷன்லே பார்த்து வேலை செய்யப்பா. உன்னை நம்பி நாங்கள் இருக்கோம். உங்க ஏரியாவுலே எதிரி டெபாஸிட் இல்லாமே போகணும்."

"உத்தரவு தலைவரே. நீங்க ஒரு தடவை எலெக்ஷன் டயத்திலே வந்தீங்கன்னா அவ்வளவு ஒட்டும் சாய்ந்துடும்."

சண்முகம் ஒடிவந்து "ஐயாவுக்கு டிபன் ரெடியாயிடுச்சு." என்று சொன்னார்.

"என்னப்பா, இப்போ டிபன்.?"

"இல்லீங்க. ரெம்ப ரெம்ப தூரத்திலிருந்து வந்து இருப்பீங்க. மணியும் இரண்டாச்சு" நீங்க பலகாரம் சாப்பிட்டு ரெஸ்டு எடுத்திட்டீங்கன்னா 3 மணிக்கு மீட்டிங்கை ஆரம்பிச்சுடலாம்."

"செகரடரி நம்ம புரோக்ராம் என்ன?"

“இருந்துட்டு போயிடலாம். இனிமேல் 4 மணிக்கு மேல் அடுத்த ஊர்லே மீட்டிங் 4 மணிக்கு கிளம்பினால் கூட போதும்.”

“செல்வி, கல்யாணம் தான் ஆகிவிட்டதே ஏன் இன்னும் சிணுங்கல்” ஹாலில் இருந்த செல்வியை சீண்டினான் செல்வம்.

“எங்க வீட்டுப்படி கல்யாணம் ஆகிடுத்து. நீங்க மாப்பிள்ளை ஆயிட்டீங்க. ஆனா உங்க வீட்டுப்படிக் கல்யாணம் முடியல்லை. நான் மருமகளா இங்கு வரவில்லை. தலைவருக்குக் காத்திருக்கும் தொண்டர்களில் ஒருவள்” அவள் பதிலுக்குச் சீண்டினாள்

“தலைவரே உன்னைச் சேர்த்து வைக்கத்தானே வந்திருக்கார்”

“பொய் சொல்லாதீங்க தலைவர் மீட்டிங்கு வந்திருக்கார். அப்படியே கல்யாணத்துக்கும் வர்ரார். அதுவும் பணம் வாங்கிகிட்டு.”

“அப்பாவுக்கு ஒரு பிடிப்பு. ஆசை இதுக்கெல்லாம் கோவிச்சுக்கிறியே. கல்யாணம் ஆனவுடன் சாப்பாடு, ஊர்சுற்றல் எல்லாமே இருக்கு அதுவும் பெரிய லெவெல்லே.”

“பின்னே என்னங்க. கல்யாணம் முடிஞ்சு யாருக்கோ மணிக்கணக்காக் காத்து கிட்டு இருக்கோம்”

“எல்லோரும் டிபன் சாப்பிட வாங்க” யாரோ கத்திவிட்டு ஓடினார்கள்.

முதலில் தலைவர், அவரது ஆட்கள், கட்சி தொண்டர்கள் ஒரு வரிசையை பிடித்து கொண்டனர்.. எதிர் வரிசையில் மாப்பிள்ளை, பெண், பெண்ணின் தோழிகள், மாப்பிள்ளையின் தோழர்கள் டிபனுக்கு அமர்ந்திருந்தார்கள்.

அப்போது..

‘வணக்கம் அண்ணே. வணக்கம் அண்ணே’

ஒரே சமயத்தில் 20 குரல்கள் ஒலித்தன.

“வணக்கம் வணக்கம். எங்கே இவ்வளவு தூரம்”

தலைவர் முகம் மலர்ந்தார்.

“அடுத்த ஊர்லே ஒரு நிகழ்ச்சி. அண்ணன் வர்ர போஸ்டர் அங்கே ஒட்டி இருந்தாங்க. ஒரு அவர்லே பார்த்துட்டு வரலாம்னு காரைத் திருப்பிட்டேன்.”

“சரியான நேரத்திலே வந்திருக்கீங்க. டிபன் சாப்பிடுங்க.”

ஒரு தொண்டன் எதிரில் உட்கார்ந்திருந்த மாப்பிள்ளையின் தோழர்களை நெருங்கி “சார் கொஞ்சம் எழுந்திருங்க. அட்ஜஸ்ட் பண்ணி அடுத்த பந்திலே சாப்பிடுங்க.” என்றான்

“ஏம்பா, அவங்க அடுத்த பந்திலே சாப்பிட சொல்றே. இப்போ வந்தவங்க அடுத்த பந்திலே சாப்பிடட்டும்.” மாப்பிள்ளை கோபத்துடன் எழுந்தான்.

அவன் அப்பாவும் “கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணிக்கப்பா அவர்கள் எல்லாம் தலைவர் ஆட்கள். அர்ஜண்டா போகணும்” என்று சொல்லிட்டு பையனைக் கண்டிக்கும் வகையில் பார்த்தார்.

“செல்வி எழுந்திரி நாமும் அடுத்த பந்திலே சாப்பிட்டா போச்சு. நண்பர்களை விட்டுட்டு நமக்கென்ன?”

செந்தில் பதறினான்.

எல்லோரும் கலவரத்துடன் எழுந்தார்கள்.

தொண்டர்கள், வந்திருந்தவர்கள் மாப்பிள்ளை நண்பர்களுடன் எழுந்தவுடன் சாப்பிட இடம் போட்டு உட்கார்ந்தார்கள்.

மாப்பிள்ளை எழுந்ததைப் பற்றி மாப்பிள்ளையும், பெண்ணும் போனதைப் பற்றியோ யாரும் கவலை படவில்லை.

பெண்ணின் தந்தை மட்டும் வந்து “கோவிக்காதீங்க, மாப்பிள்ளை நான் தனியா உங்களுக்கு ஏற்பாடு பண்றேன்” சொல்லிவிட்டு போனார்

“அண்ணே எப்படிங்க ரெஸ்பான்ஸ் இருக்குது?”

கூட்டத்தில் ஒருவர் தலைவரிடம் விசாரித்தார்.

“நம்ம மக்களை புரிஞ்சு கொள்ள ஒரு 100 வருஷம் ஆனாலும் பத்தாது. எல்லா கூட்டத்துக்கும் வர்ரான். யார் பேசினாலும் கை தட்டறான். இரண்டு கட்சியிலேயும் சாராயம் வாங்கிக் குடிக்கிறான். யாருக்கு ஒட்டு போடறான்னு அவனுக்கே தெரியாது. “

“என்ன கேட்டா நம்ம ஜனநாயக நாட்டிலே ஜனநாயகத் தொழில் வருஷம் பூரா இருக்கணும். இந்த மாதிரி 5 வருஷத்துக்கு ஒரு தபா வந்தா சரியில்ல.”

“என்னய்யா சொல்றே. 5 வருஷத்துக்கு ஒரு முறைன்னு பேரு. இப்போ 2 வருஷத்துக்கு ஒரு முறை வர்ரது. அதுக்கே சிலவுக்குத் தள்ளி போயிடுது. தலைவருக்கு தினம் தினம் எலெக்ஷன் வைக்கணுமா?”

“அப்படியில்ல அண்ணே. எல்லா ஊர்லேயும் ஒரு டயத்திலே எலெக்ஷன் வைக்கறதுன்னாலே நம்ம ஆளுங்களே சரியா செட் அப் பண்ண முடியறதில்ல. அதுக்கு பதிலா இன்னிக்கு இந்த ஊர்லே இன்னும் 3 நாள் கழிச்சு அடுத்த ஊர்லேன்னு சொல்லிட்டா நாம் நம்ம வெயிட்டைக் காண்பிச்சு எல்லா ஊர்லேயும் கெலிச்சுடலாம்.”

“அட போய்யா உனக்கு மட்டும் தெரிஞ்சமாதிரி சொல்றே. கள்ள ஒட்டு போடறது கவர்ன் மெண்டுக்கே தெரிஞ்சுடுத்தே.

அவங்களும் கட்சிதானே. அவங்களும் செட்டப் பண்ண ஆரம்பிச்சுட்டாங்க. “

“நடிகை நம்ம கட்சிக்கு வர்ரதா பேசிக்கிறாங்களே. தலைவரே அது விஷயம் என்ன?”

“ஆமா அதைக் கேளுங்க. எங்கே போனாலும் அதையே கேட்கறாங்க. அந்த பொம்பளையை யாரு சீவி விட்டுருக்காங்கன்னு தெரியல.. அது பேப்பரிலே நான் கட்சிப் பணிக்கு வர போறேன்னு சொல்லிட்டாங்க. எங்கே நம்ம மந்திரி சான்ஸ் போயிடுத்தோன்னு ஒவ்வொரு மந்திரியும் கவலைப்படறான்.”

பேச்சு அரசியல், சினிமா சுற்றி ஒரு வழியாக டிபன் முடிந்தது. தலைவர் தான் டயத்தைப் பார்த்து, “நேரமாச்சாப்பா. சீக்கிரம் முடிச்சுட்டு வாங்க. கரெக்டா ஆரம்பிச்சா அடுத்த மீட்டிங்கு கொஞ்சம் சீக்கிரமா டயத்துக்கு போயிடலாம் அப்பக்கூட கடைசி மீட்டிங் முடிய 12 மணி ஆகிடும்” என்று சொல்லி எழுந்தார்.

மேடை கலகலப்பாகியது. மேடையில் தலைவர் உட்கார்ந்தவுடன் வட்டங்கள், மாவட்டங்கள், நகர செயலாளர் யார் யாரோ மாலை, துண்டு அணிவித்தார்கள்.

தலைவர் எழுந்து பேசினார். விலைவாசியைப் பற்றிப் பேசினார். காவிரி பிரச்னைப் பற்றிப் பேசினார். தாழ்த்தப்பட்ட மக்களுக்கு கட்சி செய்த நன்மைகள், வழங்கிய சலுகைகள் நினைவு கூர்ந்தார். மாற்றுக்கட்சியினரின் கொள்கைகளை ஏமாற்று வித்தை என்று விமர்சித்தார். ஒரே கேலியுடனும், நகைச்சுவையாகவும் பேசிய பேச்சுகள் தொடர்ந்து கை தட்டுகளைப் பெற்றுக் கொண்டிருந்தது.

இறுதியில் “இந்த ஊருக்கு வந்த பொறுப்பினை நிறைவேற்றுகிறேன்” என்றவர் “இனியதாக இல்லறம் நடத்த இவ்விரு

உள்ளங்களும் இணைய நான் வாழ்த்துகின்றேன்" என்று சொல்லி மாலையை இருவர் கையிலும் கொடுக்கப்போனார்.

செல்வம் உடனேயே இரண்டு மாலைகளையும் வாங்கிக்கொண்டு "ஐயா தலைவரே மன்னித்துக்கொள்ளுங்கள். இன்று எனக்கு திருமணம். ஏழையோ, பணக்காரனோ படித்தவனோ படிக்காதவனோ அழகனோ அழகற்றவனோ மணமகன் தான் அவன் மண நாளில் கதாநாயகன் அவனும் அவன் நண்பர்களும் முக்கியம் . ஆனால் இன்று நீங்கள் வந்தீர்கள் உங்கள் கட்சி ஆள்கள் வந்தார்கள். உங்களை சுற்றி விழா எனக்கும் என் நண்பர்களுக்கும் மரியாதை இல்லை. ஆனால் நாங்கள் உங்களுக்காக மணிக்கணக்கா தேவுடு காத்துக்கிடந்தோம். உங்களுக்குப் பெரிய மாலை உங்கள் ஆட்கள் வந்தவுடன் நாங்கள் ஓரமாய்ப் போய் நிற்கவேண்டும் ஆனால் ஐயர் நடத்தி வைத்த திருமணத்தில் என்னைமட்டும் முன்னிறுத்தி என்னை கதாநாயகன் ஆக்கியிருந்தார். என் திருமண நாளில் நான் தான் கதாநாயகன். நான் கதாநாயகனாக இல்லாத என் திருமண விழா எனக்கு தேவையில்லை." செல்வம்.

"செல்வம்" அப்பா குரல் கொடுத்தார்

"நீங்கள் வாய் கிழிய பேசுவீர்களே சுயமரியாதை அந்த சுயமரியாதையை நினைத்து நான் செய்ததை பாருங்கள். அது எவ்வளவு சரி என்று தெரியும். சுயமரியாதை பேச்சுக்கு மட்டும் இல்லை வாழ்க்கைக்கும் தான்."

செல்வி மெதுவாகச் சிரித்துக்கொண்டேக் கைகளைச் சத்தம் இல்லாமல் தட்டினாள். செல்வம் அதை கவனிக்கத் தவறவில்லை.

கூட்டம் மௌனமாக கலைந்தது

## மோடியை திகைக்க வைத்த கேள்வி

“கல்யாணம் ஆகி குடும்பம் நடத்துகிறவர்கள் தான் பிரதம மந்திரி ஆகவேண்டும் என்று கான்ஸ்டிட்யூஷனில் ஒரு திருத்தம் கொண்டு வந்தால் நல்லது என்று நினைக்கிறேன்..” பி.எம். ஆபிஸில் வேலை செய்யும் கிருஷ்ணமூர்த்தி தன் சகா குப்தாவிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

“ஏன்? என்ன விஷயம் திடீரென?” என குப்தா கேட்டார்.

“ஒண்ணும் புதுசு இல்லையே. இவர் PM ஆனதிலிருந்து காலையில் 7. 00 மணிக்கு நாம எல்லாம் தயாராக இருக்கணும்னு சொல்லிவிட்டார்”.

“விருப்பம் இல்லாதவர்கள் சொல்லி விடலாம். நான் மாற்றலுக்கு ஏற்பாடு செய்துவிடுகிறேன் என்றும் சொன்னாரே. நாம் சரின்னு ஒத்துகிட்டுதானே இங்கே வேலை செய்கிறோம்.”

“சமயத்தில் இங்கே தூங்கி விடுகிறார். ஏது தூக்கம்?. இரண்டு, மூன்று மணி ரெஸ்ட் அவ்வளவுதான். அது இல்லை ஏதோ இரண்டு மூன்று மாதம் புது மாடு புல்லு தின்னுது அப்படின்னு பார்த்தா 4 வருஷமும் இதே மாதிரி ஓட்டறார்”.

“சரி என்ன விஷயம்? சொல்லு”

“அவருக்கு குடும்பம், குட்டி ஒன்றுமில்லை. நாளெல்லாம் ஆபீஸில் இருக்கிறார் அவ்வளவு வேலை கொடுத்துவிட்டுப் போயிருந்தார்.. மதுரை போவதற்கு அவ்வளவு ஏற்பாடுகள். மாலை மதுரையில் இருந்து கால் போட்டு உடனே ஏர்போர்ட்லே பார்க்க வரும்படி சொல்லி விட்டார்.”

**எஸ். வெங்கட்ராமன்**

ஏர்போர்ட் போனவுடன் “மிஸ்டர். மூர்த்தி நான் மதுரை போயிருந்தபோது எனக்கு கருப்புக்கொடி காண்பித்தார்கள். அவர்களில் சிலரை கைது செய்து விட்டார்கள். எப்படியாவது அவர்களை என்னோடு வீடியோ கான்பரன்ஸ் ஏற்பாடு செய்துவிடுங்க. ரொம்ப பப்ளிசிட்டி வேண்டாம்.’ன்னு சொல்லிவிட்டார்.”

“எப்போ சார்?”

“எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் செய்துவிடுங்க”

கிருஷ்னமூர்த்தி மறு நாள் காலை பொழுது விடியும்போது எடப்பாடியை தொடர்புகொண்டு “பிரதமர் கைதான மக்களோடு வீடியோ கான்பரன்ஸ் பண்ணனும்னு விரும்புகிறார். தாங்கள் ஏற்பாடு செய்ய முடியுமா?” என்று கேட்டார்.

“எதுக்கு?” எடப்பாடி கேட்கிறார்.

“தெரியாது பி.எம் கேட்கச் சொன்னார்”

“ஒண்ணும் புரியல்லை. ஏதாவது சிக்கல் வந்துடுமா? அரைமணி கழித்துப் போன் செய்யுங்கள். நான் அமைச்சரவையில் விவாதித்துப் பதில் சொல்கிறேன்”

எடப்பாடி அமைச்சர்களை அவசரம் என்று சொல்லிக் கூட்டினார். ஒரே ஒரு அமைச்சர் மட்டும் ஏதோ விழாவுக்காக வெளியூர் சென்றிருந்தார். அமைச்சரவையில் விவாதித்தார்கள்.

“பொதுவாக சிறையில் உள்ள எவரையும் யாரும் பார்க்கலாம். இவர்களெல்லாம் குற்ற பின்னணியில் கைதாகவில்லை. நாளைக்கு ரிலீஸ் செய்து விடுவார்கள்”.

ஒரு அமைச்சர் சொன்னார்.

முதலமைச்சர் குறுக்கிட்டுச் சொன்னார் “அது அப்படி இல்லை பொதுச்சொத்துக்குச் சேதம் விளைவித்தல் செக்ஷனில் புக் பண்ணியிருக்கோம். நான் இரண்டு நாட்கள் உள்ளே வைக்கும் படி டிஐஜியிடம் கட்டளைக் கொடுத்து இருக்கிறேன்.”

“கைதானவர்கள் எல்லோரும் எதிர்க்கட்சியினர். அவர்கள் பி.எம் இடம் பேச விருப்பம் இல்லை என்றால் என்ன செய்வது?”

“பி.எம் வீடியோ கான்பிரன்ஸ் தான் கேட்டிருக்கிறார். அவர்களோடு பேச ஏற்பாடு செய்யச் சொல்லவில்லை.” என்று விளக்கினார் முதலமைச்சர்

“நேரம் கேட்டா என்ன சொல்றது” என்று ஒரு அமைச்சர் கேட்டார்

“நாளை காலை ஏழு மணிக்கே சொல்லிடலாம். சிறைக்கு மட்டும் வீடியோ கான்பிரன்ஸ்ஐ ஏற்பாடு செய்யலாம். முடிந்த வரை ரகசியமாய் வைத்துவிடலாம். எதிர்க்கட்சிக்காரங்களுக்கு மீட்டிங் முடிந்த பிறகுதான் தெரியும். அவர்களால் அதைத் தடுத்துக் கிளர்ச்சி, போராட்டம் எதுவும் செய்ய முடியாது. பிஜேபி கூட கூட்டணி பேசிகிட்டு இருக்கோம் பி.எம்க்கு பெயர் கிடைச்சா நமக்கு நாலு வோட்டு கூடுதலாக் கிடைக்கும் இங்கே பண்ண முடியவில்லை என்று சொல்றதைவிடக் கேட்டு அவர்கள் யாரும் ஒத்துக்கவில்லை என்றால் நமக்கு பிரச்சினை இல்லை. ரெண்டாவது, பி.எம் படு உஷார் பேர்வழி காரியத்தை எப்படிச் சாதிக்கிறது என்பதில் நம்பளை விட சூரர், படு கில்லாடி என்பதை ஒத்துக்கொண்டுதான் ஆகவேண்டும்”

பி.எம் ஆபீஸிலிருந்து சரியாக 30 நிமிஷத்தில் கால் வந்தது.

‘15 நிமிஷத்திற்கு பிறகு போன் செய்யவும்.’ குறும் செய்தி பறந்தது.

“மந்திரி யாராவது சிறைக்குப் போக வேண்டுமா? பி.எம் ஏதாவது அது பற்றி பேசினரா?” முதலமைச்சர் கேட்டார்

“இல்லை கைதானவர்களுடன் வீடியோ கான்பரன்ஸ் அவ்வளவுதான் சொன்னார்”. என பதிலத்தார் கிருஷ்ணமூர்த்தி

சிறை அலுவலகத்தில் வீடியோ கான்பிரன்ஸ் ஏற்பாடு இரவோடு இரவாக நடந்தது.

கைதிகள் காலையில் எழுந்த உடன் எல்லோர் முகத்திலும் சோகத்தின் ரேகைகள் தெளிவாகத் தெரிந்தன.

அவர்களில் சிலர் “மோடியே திரும்பிப்போ” என்று கத்தினவர்கள்தான். சிறைச்சாலையில் இரவு முழுவதும் ஏதோ வேலை நடப்பதைப் பார்த்துக் கைதிகளுக்கு ஒன்றும் புரியவில்லை. சிறையில் திறந்தவெளி மைதானம் சுத்தம் செய்யப்பட்டிருந்தது.

சிறையில் இதுமாதிரி அரசியல் காரணங்களுக்காகக் கைதாகி வருபவர்களுக்குக் கெடுபிடி அதிகம் கிடையாது. பெரிய திறந்த கூடம். ஒன்றிரண்டு மின்விசிறிகள்கள்கூட இருக்கும். நன்கு பராமரிக்கப் பட்டப் பொதுக் கழிப்பறை, பொதுக் குளியல், அநேகமாக அரசியல் காரணத்துக்காகக் கைதாகி வருபவர்கள் நூற்றுக்கணக்கில் இருப்பதாலும் அவர்கள் உடனே விடுதலை ஆகி விடுவதாலும் கண்காணிப்பு எதுவும் இருக்காது

அதிலும் அரசியலில் யார் வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் அதிகார வட்டத்திற்குள் போகலாம் என்பதால் அவர்களுக்கு டீ, பிஸ்கட், சிகரெட் போன்ற சிறிய தேவைகளுக்குக் குறை இருக்காது.

இந்த தடவையும் அப்படித்தான் கைதானவர்கள் நினைத்தார்கள். ஆனால் கூட்டத்தில் வந்தவர்கள் ஒரு பரோட்டா கடையில் சாப்பிட்டு விட்டுக் காசு கொடுக்காத போது சிறு கைகலப்பு ஏற்பட்டு விட்டது. கடை வாசலில் இருந்த ஒரு காரும் இரண்டு

இருசக்கர வாகனங்களும் சேதம் அடைந்துவிட்டன. வாட்ஸ் அப்பில் வைரலாக பரவி சிளம் ஏதாவது செய்ய வேண்டிய கட்டாயத்திற்கு உட்படுத்தப் பட்டார்.

முதலமைச்சர் டிஐஜியிடம் “அவர்கள் மேலே பொதுச்சொத்துச் சேதப்படுத்துதல் செக்ஷனில் புக் பண்ணி உள்ளே போடச் சொன்னார். இரண்டு நாள் கழித்து அவர்களிடம் பொதுச்சொத்துக்களை நாசப்படுத்த மாட்டேன் என்று எழுதி வாங்கி விட்டு விடலாம். எதுக்கும் லீகல் டிபார்ட்மென்ட்டைக் கேட்டுக் கொள்ளுங்கள் என்று சொல்லிவிட்டார்”.

அன்று இரவே விடுதலை ஆகிவிடலாம் என்று எதிர்பார்த்து இருந்தவர்களுக்கு அது பெரிய ஏமாற்றமாக இருந்தது.

கைதாகி உள்ளே வந்தவுடனேயே சிறை அதிகாரி உங்களை பொதுச்சொத்துக்கு சேதம் விளைவித்தல் செக்ஷனில் புக் பண்ணியிருக்கோம் வெளியில் ரிலீஸ் செய்யச் சிக்கல் இருக்கின்றது இரண்டு நாளாகும் என கூறிவிட்டார்.

காலையில் 5.00 மணிக்கு பெரிய டிவி-ஐ ஹாலில் கொண்டு வைத்தார்கள். 6. 00 மணிக்கு ரோல் கால் போன போது “உங்களை எல்லாம் பி.எம் வீடியோ மூலம் பார்க்க விரும்புவதாகவும், ஒன்றிரண்டு பேர்களோடு அவர் பேசுவார். இது கட்டாயம் இல்லை என்றும் பார்க்க விருப்பம் இல்லாதவர்கள் ஹாலில் இருப்பது அவசியம் இல்லை பேச விருப்பம் உள்ளவர்கள் முன்வரிசையில் உட்காரலாம். எவ்வளவு பேரோடு பேசுவார்? என்ன பேசுவார்? என்று தெரியாது அனேகமாக இந்த நிகழ்ச்சி 7.45 இருந்து 8.15 வரை இருக்கலாம்”

என்றும் சிறை அதிகாரி சொன்னார். “

“இங்கு ஒருத்தருக்கு கூட ஹிந்தி தெரியாது. நாங்கள் எப்படி பேசுவோம்?” ஒருவர் கேட்டார்.

“அது பற்றிக் கவலைப் படாதீர்கள். ஹிந்தி மொழி பெயர்ப்பாளர் இருப்பார். அவர் மோடி பேசுவதை தமிழில் உங்களுக்குச் சொல்லுவார். நீங்கள் பேசுவதை மோடிக்கு ஹிந்தியில் சொல்வார்” என்று சொன்னார் அதிகாரி

“பஹுத் அச்சா”

கோரஸ் அவரை திகைப்படையச் செய்தது.

சிளம் மட்டும் வீடியோ கான்பிரன்ஸ் பார்க்க வசதி செய்யும்படி சொல்லியிருந்தார்.

ஐ.டி விங்க் இவ்வளவு குறுகிய காலத்தில் செய்வது கடினம் என்றும் முயற்சி செய்வதாகவும் சொன்னார்கள்.

கைதானவர்களில் பலர் “நான் மோடியை பார்த்ததே இல்லை. இன்று பார்க்கப் போகிறேன்.” என்று பேசிக்கொண்டார்கள்

“அவர் மட்டும் எப்படி இப்படி மாற்றி யோசனை செய்கிறார்? அவர் செய்கிறாரா இல்லை அவருக்கு யாராவது ஆலோசனை சொல்கிறார்களா? தெரியவில்லை” என்றார் ஒருவர்.

“அவரே பெரிய கில்லாடி. டீக்கடையில் வேலை செய்தவர் பி.எம் ஆக வருவதற்கு எத்தனை முயற்சி செய்திருக்க வேண்டும். இந்த மாதிரி வித்தியாசமா செய்ததினால்தான் பி.எம் ஆகியிருக்கிறார்.” என்றார் மற்றோருவர்

“நேத்து ட்விட்டரில் பார்த்தேன் அவருக்கு வந்த பரிசுப் பொருட்களை எல்லாம் ஏலம் விட ஏற்பாடு செய்து விட்டாராம்.” - இன்னொருவர்

“இனிமேல் எந்த பி.எம் வந்தாலும் அவருக்கு பிடிக்குமோ பிடிக்காதோ செய்துதான் ஆக வேண்டும். இல்லை என்றால் மீட்டிங்கில கிழிச்சிடுவாங்க. அதிலே அவர் நிற்கிறார்.”

வீடியோ கான்பிரன்சுக்கு 7. 30 மணிக்கு தயாராகிவிட்டது.

PM -ஐ ஒரு தடவை பார்த்து விடலாம் என்று எல்லோரும் டிவி கிட்டே கூடி நின்றார்கள். அவர்களை அமைதியாக உட்கார வைப்பதற்குள் சிறை அதிகாரிகளுக்குப் போதும் போதும் என்று ஆகிவிட்டது.

சரியாக 7. 45 கடிகாரம் காட்டியது.

"வணக்கம்" குரல் கணீரெனக் கேட்டது. பி.எம் டி.வி திரைல் சிரித்துக்கொண்டு இருகரம் கூப்பி நின்றார்.

எல்லோரும் அமைதியாக பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"பதில் வணக்கம் சொல்வது தமிழர் பண்பாடு" மோடி தொடர்ந்தார்.

"வணக்கம் வணக்கம்"எல்லோரும் பல குரலில் கத்தினார்கள்.

இந்தியில் மோடி பேசினார்.

"இந்த ஏற்பாட்டை செய்த தமிழக அரசுக்கும் குறுகிய நேரத்தில் கான்ஃப்ரன்ஸ்க்கான ஏற்பாட்டைச் செய்த சிறைத்துறை காவல் அதிகாரிகளுக்கும் என்னுடன் பேச வந்திருக்கும் உங்களுக்கும் என் மனமார்ந்த நன்றி". அதை மொழிபெயர்த்தவர்.

"டேய் பெரிய ஆள்தான்" ஒருவன் அடுத்தவனிடம் சொன்னான்.

"என்னை திரும்பிப் போ என்று சொன்னீர்கள். ஏன் என்று தெரிந்து கொள்ளலாமா?"

"10 விழுக்காடு உயர் ஜாதியினருக்கு என்று சட்டம் இயற்றப் போவதாக தலைவர்கள் சொன்னார்கள்."

“10 விழுக்காடு யாருக்கு? ஏழைகளுக்குத் தானே. பணக்காரர்களுக்கு இல்லையே. எல்லா ஏழைகளுக்கும் உதவி செய்து முன்னேற்றுவது அரசின் கடமை இல்லையா? உயர் ஜாதிக்காரர் என்பதால் அவனைக் கடைசி வரை ஏழையாய்த் திண்டாட வைப்பது எந்த வகையில் நியாயம்? நீங்களெல்லாம் நாட்டில் ஏழையே இல்லை என்ற நிலைக்கு வர வேண்டும் என்று ஆசைப்படுவீர்கள் இல்லையா?”

“ஆமாம். ஆமாம்.” என்றார்கள் எல்லோரும்

“எல்லோரும் என்ன படிப்பு வேண்டுமானாலும் படிக்க வசதி வேண்டுமென்று விரும்புகிறீர்கள் இல்லையா?”

“ஆமாம் ஆமாம்.” எல்லோரும் சொன்னார்கள்

“ஏதேனும் குறைகள் இருந்தால் எனக்கு நேராக தொடர்பு கொண்டு பேசுங்கள். ஜனநாயகம் மக்களின் பிரதிபலிப்புதான். வேறு ஏதாவது பேச வேண்டுமா?”

வித்தியாசமான கிராப் வைத்துக் கொண்டுள்ள இளைஞன் கை உயர்த்தினான். “நான் ஹிந்தியில் பேசலாமா? எனக்குத் தமிழும் தெரியும் . தமிழ்நாட்டில் இரண்டு வருஷமாக இருக்கிறேன்”

“வேண்டாம் உனக்கு தமிழ் தெரிந்தால் தமிழிலேயே பேசு. இந்தியில் பேசினால் தவறான புரிதலுக்கு வாய்ப்பு உண்டு.”

“நான் பீஹார். பிளஸ் டூ படித்து வேலை கிடைக்காமல் தமிழ்நாட்டில் கொத்தனாருக்கு உதவியாளராக இருக்கிறேன் என் கூட 4 பிஹாரி பையன்கள் வந்திருக்காங்க. எங்கள் முதலாளி காண்ட்ராக்டர் எல்லோரையும் லாரியில் ஏறும்படி சொல்லி கூட்டி வந்தார். அவருடைய இலக்கு ஒரு லாரியாம். அவர் உடனே வெளியே வந்து விடலாம் என்று சொன்னார். ஆனால் இன்னும் இரண்டு நாள்

இங்கே இருக்க வேண்டும் போல் தோன்றுகிறது. இந்த மூன்று நாள் சம்பளத்தை முதலாளியிடம் சொல்லி வாங்கி தரமுடியுமா?" பீஹாரி

பி.எம் விக்கித்து "ஜெய்ஹிந்த்" விடைபெற்றார்.

## தவறான முகவரிகள்

“டேய் முத்து ரேடியோவை. பெரிசா வைச்சு ஏதோ கர்னாடாகாவுலே கலாட்டாவாமே என்னன்னு கேளு.” கொல்லைபுறக் கேணியில் குளித்துக் கொண்டிருந்த சௌரி கத்தினான்.

“பெரிய தலைவரு நியூஸ் கேட்க நான் இவருக்கு செக்ரடரி” வாய் தான் புலம்பியதே தவிர செயலில் இறங்கினான்.

அண்ணன் தன்னை இவ்வாறு அதிகாரம் செய்வது அவனுக்கு பிடிக்காது. இருந்தாலும் அண்ணனிடம் பயம்.

“அண்ணே, காவிரித்தண்ணிர் பிரச்னையிலே ஏதோ சென்ட்றல் கவர்ன்மெண்டு பண்ணிடுத்தாம். அதனாலே கர்நாடகாவுலே தமிழர்களை அடிக்கிறாங்களாம். தமிழர் சொத்துக்களை சூறையாடுகிறார்களாம்.”

“என்ன. தமிழர்களை அடிக்கிறாங்களாம். அவங்க சும்மாவா இருக்காங்க.” குளியலை அவசரமாக முடித்துக்கொண்டு தலையை துவட்டிக்கொண்டு கேட்டான்.

“இல்லை அண்ணே, அவங்க ஓடிவந்துட்டு இருக்காங்களாம். ஒசூர், தர்மபுரியிலே எல்லாம் வர்ராங்களாம்.”

“என்னது தமிழர்களுக்குச் சோதனைக்கு மேல் சோதனை வரது. சிலோன்லே அடிக்கிறான்னு பார்த்துக்கிட்டு இருக்கிறோம். இங்கே கர்நாடகத்திலேயும் அடிக்கிறாங்க.. சரி. நான் போய் என் தோஸ்துகள் கிட்ட சொல்லிட்டு வர்ரேன். நான் ராத்திரி டிரெயினுக்கு மெட்ராஸ் போறேன். மாயவரத்திலே ராத்திரி 7. 30 மணிக்கு தானே”

“ஏன் அண்ணே மெயில்லே போயிடு.”

“இரண்டு விஷயம் தெரிஞ்சிக்கோ. முதல்லே போற டிரெயின் செங்கோட்டை வண்டி தான் இரண்டாவது எனக்கு எல்லா வண்டியும்

ஒண்ணு தான். டிக்கெட்டோ எடுக்கப்போறதில்லை. அதிலே ஒரு நாயம் வேணும். மெயில் சார்ஜ் ஜாஸ்தி. நமக்கு எவ்வளவு குறைவா வேணுமோ அம்புட்டுதான் கவர்ன்மெண்டுலேருந்து எடுக்கணும்".

"நான் அவசரமாக போயிக்கிட்டுருக்கேன். அம்மா மார்க்கெட்டுக்கு போயிருக்கு. அப்பாவுக்கு விஷயம் சொல்லிவிடு இன்னிக்கு எனக்கு சாப்பாடு வெளியிலேயே முடுச்சுக்கிறேன். தோஸ்துகளை பார்த்து எவ்வளவு நேரமாகும்னு சொல்லமுடியாது."

"என்ன அண்ணே இப்படி பேசிக்கிட்டுப் போறீங்க. இன்னும் இரண்டு நாள்ளே பெரியப்பா பொண்ணுக்குக் கல்யாணம். அப்பா பத்திரிகை கொடுக்கப் போயிருக்கார். அப்பா பேசுவாரு."

"அப்பா பேசட்டும் என்னை உதவாக்கரைன்னு சொல்லப் போறாரு சொல்லட்டும் அது ஒண்ணும் புதுசு இல்லை. இங்கே நான் இல்லேன்னாலும் கல்யாணம் நடந்துடும். அது நான் வந்து கூட நயமா தங்கச்சியை விசாரிச்சுக்கிருவேன். ஆனால் தமிழர்கள் நிலையைப் பார். யார் இருக்காங்க? அவங்களுக்காக போறேன். டயத்தை வேஸ்டு பண்ணாதே."

லுங்கியை கட்டிக்கொண்டான். தொளதொள ஜிப்பா போட்டுக்கொண்டான். தலையை வாரிக்கொண்டே பாடினான். 'தமிழனென்று சொல்லடா தலை நிமிர்ந்து சொல்லடா. தமிழன்னு ஒரு இனமுன்டு. தனியே அவர்க்கு ஒரு குணமுண்டு.'

"டேய் செருப்பு எங்கே போச்சுடா?"

"அப்பா மாட்டிக்கிட்டு போய்ட்டார் போலேருக்கு."

"சரி சரி நான் இப்போ சமாளிச்சுக்கிறேன். அதை எடுத்து வை நான் வண்டிலே போயிட்டு வரவா. நீ எங்கினாச்சும் போவணுமா"

"இன்னிக்கு டியூசனுக்கு போவணும்"

“சரி, நான் சமாளிச்சுக்கிறேன்”

வண்டி வேணாம்னு மேலுக்கு சொன்னானே தவிர தம்பி சைக்கிளை வேணும்னு சொன்னதில் வருத்தம் தான். அதை காட்டிக் கொள்ளலாமா?

“முத்து வரேன். நயினாவிடம் சொல்லிவிடு அவரைப் பின்னாலேப் பார்த்துக்கலாம். டேய் முத்து இங்கே வாயேன்” குரல் இழைந்தது.

முத்துவுக்கு தெரியும். எதுக்கு கூப்பிடறான் என்று தெரியாதது போல் நின்றான்.

“என்ன அண்ணே”

“துட்டு ஏதாச்சும் வைச்சிருக்காயா? நான் மெட்றாஸிலேருந்து திரும்பி வந்து தந்துடறேன்.”

யாருக்கு எப்படியோ முத்துவுக்கு அவன் அண்ணன்மேல் ரொம்ப நம்பிக்கை அண்ணன் ஒரு காலத்தில் பெரிய தலைவரா வருவார்னு நம்பி இருந்தான்.

“ஐந்து ரூபாய் இருக்கண்ணே. கிரிக்கெட் விளையாட பந்து வாங்க வைச்சுருக்கேன்”

“அட பந்து என்னடா நல்ல பேட்டே நான் வாங்கித்தரேன்”

ஐந்து ரூபாய் கை மாறியது.

“நான் வரேண்டா முத்து” அவன் முதுகில் ஒரு தட்டு தட்டி விட்டு கிளம்பினான் சௌரி. •வாசல் வரை போனவன் திரும்பி வந்தான்.

“டே முத்து என் பாண்ட் பாக்கெட்டிலே ஒரு சீப்பு வைச்சிருந்தேன். அதை எடுக்க மறந்துட்டேன். ஏதோ முக்கியமானது ஒன்று குறையுதே என்று நினைவு வந்திச்சு. நல்லவேளை” அந்தச்

சீப்பை கையில் எடுத்துக்கொண்டு, தலையைக் கொஞ்சம் சீவிக்கொண்டு லுங்கி, ஜிப்பா, சகிதம் கிளம்பினான்.

“டேய் சோமு வந்தா வருவான். அண்ணன் கர்நாடகா போறாரு முடிஞ்சா வந்து ஜாயின் பண்ணச் சொன்னார்னு சொல்லு”

வழக்கமாக போகும் டீக்கடைக்கு போய் நின்றான் சௌரி. நண்பன் தேனப்பன் அங்கு டீ குடித்து கொண்டிருந்தான்.

“என்ன தேனு. விஷயம் தெரியுமா?” என்று ஆரம்பித்தான்

“என்ன தலைவா நீ சொன்னாக் கேட்டுக்கிறேன்”

“என்னய்யா நீ எல்லாம் இப்படி இருக்கிறதனாலே தான் அவனவன் தமிழன்னா இளிச்சவாயன்னு நினைச்சுடறான். உங்களை தட்டி எழுப்ப முடியாதய்யா. பாரதியார் வந்தா என்ன பாரதிதாசன், வந்தா என்ன வள்ளுவன் போறவே போறது. நம்ம தூக்கம் அப்படி”,

“என்ன தலைவரே புல் பார்ம்லே இருக்கே போல இருக்கு. விஷயத்தை சொன்னாத்தானே புரியும். உனக்குதான் தெரியும் காலையிலே நம்ம மூளைக்கு ஒன்றும் வராது. சூடான டீ உள்ளே போனாத் தான் விளங்கிக்கவே முடியும்.”

“சரி விஷயத்தை கேளு. நம்ப சென்ட்றல் கவர்ன்மெண்ட் இருக்குலே அதான் ராவ் கவர்ன்மெண்ட் ஏதோ எழுதிச்சாம். அதைத்தொட்டு கர்நாடகாவுலே தமிழங்களை அடிக்கிறாங்களாம்”

“ஆமா, ஏதோ லாரிலே கத்திக்கிட்டு போனாங்க நான் நேத்து கும்பகோணம் போயிருந்தேன். அங்கு பார்த்தேன். இப்ப உங்கிட்ட சொல்லலாம்னு இருந்தேன்”

“ஏதோ கத்திக்கிட்டு போகலை தமிழனுக்குக் குரல் குடுத்துட்டுப் போறான். நீ என்னமோ கத்திட்டு போறான்றியே. உன்னை மாதிரி

துரோகி இருக்கத் தொட்டுதான் அவனவன் தமிழனைத் தட்டிப்பார்க்கிறேன்"

•"என்ன தலைவரே என்கிட்டக் கோபப்படறே. லாரிலே கத்தினா ஒண்ணும் விளங்க மாட்டேன்னுது. நம்ம ஆளுங்க கத்துறது கூடக் கிடையாது. ஒரே லாரிலேருந்து வாழ்கன்னும் கத்தறான். ஒழிகன்னும் கத்தரான், கட்சியும் சொல்ல முடியாது எல்லாம் பார்த்த மூஞ்சிதான். எந்தக் கட்சிக்கும் போயிடறான். ரொம்ப பேஜாரா இருக்குது."

"சரி, தேனு நான் இன்னிக்கு வண்டி ஏற்றேன். தமிழனை அடிச்சுக்கிட்டு இருந்தான்னா நான் சும்மா பார்த்துகிட்டு இருக்க முடியாது. என் கூட நீ வர்ரியா? எனக்கு வர்ரேன் இல்லேங்கிற பதில்தான் வேணும் சும்மா பால்மாறற வேலையல்லாம் வேண்டாம்"

"என்ன தலைவரே, நான் உன்னை மாதிரி தலைவரா? மல்லாக்கொட்டை மூட்டை எடுத்து நாளை போவணும்னு அப்பா சொல்றார். நாலு காசு பார்த்தாத் தான். தங்கச்சிக்குச் சேலை எடுத்து அவங்க வீட்டுலே கொண்டு போய் விட முடியும். தங்கச்சிக்கு குழந்தை பொறந்து நாளாச்சு. அப்பா இந்தக் காசுக்காக நாள் கடத்திக்கிட்டு இருக்கார்"

"அட போங்கய்யா, தமிழன் இன்னும் அடிவாங்கணும். தமிழச்சியெல்லாம் ரோடுலேயே அவமானப்படுத்தணும். அப்பக் கூட உங்களுக்கு ரோசம் வராது ரத்தம் துடிக்காது வருஷம் பூரா வீட்டுக்கு வேலை செய்யறீங்க. ஒரு ஆபத்துக்கு உதவ வரலேன்னா என்ன நினைப்பாங்க"

"சரி, தம்பி, என்ன அப்படிக் கோபப்படுறீங்க" எண்டார் அங்கே வந்த ஒரு பெரியவர்.

"யார் பல்லு தாத்தாவா.?"

“ஆமாம்பா”

“என்ன தாத்தா, என்ன சொல்றீங்க”

“ஆமாம் என்ன தம்பி. கர்நாடகத்திலே வேலை கிடைக்குது. சம்பளம் நிறைய கிடைக்குதுன்னு அங்கே போனாங்க. போன வருஷம் வரை நிறைய சம்பாதிச்சாங்க. என் தங்கை பொண்ணுக்குக் கூட நம்ம சமரசத்தைக் கேட்டாங்க. என்ன சொன்னாங்க”.

“அவரு தங்க சுரங்கத்திலே 3000 ரூபாய் சம்பாதிக்கிறாரு. அவருக்கு 10,000 கையிலே கொடுத்து கல்யாணம் செய்யின்னு சொன்னாங்க. என்கிட்டே அவ்வளவு பணம் இல்லே. பரவாயில்லைன்னுட்டு கட்டினானா? சம்பாதிச்ச போது நம்ப கையிலே கொடுத்தாங்களா?, இல்லை வசதியாய் இருக்கோம்னு நமக்கு உதவி செய்தார்களா?”

“என்ன தாத்தா சொல்றீங்க? இப்ப நாம அவங்களுக்கு உதவக்கூடாது. இந்த சண்டையினாலே தான் நாமே அழிஞ்சோம். கட்டபொம்மனை காட்டிக்கொடுத்தது இங்கீலீஷ்காரனா? சேரனுக்கும், சோழனுக்கும் சண்டை. பாண்டியனோட சண்டை பெரியவரே தயவு செஞ்சு இந்த மாதிரி வெளியே பேசிக்கிட்டு அலையாதீங்க. நியூஸ் கேட்டு ஒவ்வொருத்தனும் வெறிக்கணக்கா இருக்கான். ஏதாவது ஏடாகூடமாயிடப்போகுது. ஏதோ நாம பழகிட்டோம். எனக்கே எவ்வளவோ பீலிங் வர்ரது தெரியுமா.?”

“எனக்கென்ன தம்பீ நான் போறேன்” தாத்தா அங்கிருந்து கிளம்பினார்.

•”இந்த மாதிரி கிழபோல்ட்டெல்லாம் வீட்டிலே சும்மா இருக்கணும் எதையுமே சமாளிச்சுப் பேசும் எதையும் எதனச்சோடும்.

கனெக்ட் பண்ணும்” என்று சொல்லிவிட்டு “சரி நீ வர்ரல்லே டீ சாப்பிடு.” என்றான் சௌரி

“இப்பத் தான் சாப்பிட்டேன். நீதான் பார்த்துக் கிட்டு இருந்தியே.”

“அடிக்கடி சாப்பிடறதுக்காகத் தானே நம் நாயர் ரொம்ப லைட்டா போட்டுத் தர்ரார். “நாயர் இரண்டு சிங்கிள் டீ போடு” என்று சொன்னவன், “இல்லே நாயர் மூணு சிங்கிள்” என்ற குரல் கேட்டுத் திரும்பினான்.

“நாகு” நீ வர்ரலேன்னா நினைசேன்”

“அப்பா, நேத்து ரொம்ப மூட் அவுட்டாயிடுட்டாரு சரி படம் பார்க்கலாம்னு போயிட்டேன். ஒரேயடியாய் தூங்கிட்டேன். எழுந்து பார்த்தால் மணி 8 ஆயிடுச்சு. அப்பா கத்திக்கிட்டே வயலுக்குப் போயிட்டார். லேட்டாயிடுத்தேன்னு தான். நாஷ்டாகூட பண்ணாமே ஓடியாந்துட்டேன்.”

“அப்படியா நாயர் ஒரு ‘பன்’னும் கொடு.”

‘பன்’ னைக் கடிந்து கொண்டு டீயை ஒரு கையில் பிடித்து கொண்டு இருந்தான் நாகு என்ற நாகராஜன்.

“நாகு கர்நாடகாவுலே நம்ப தமிழனை அடிக்கிறாங்களாம். நான் இன்னிக்கு வண்டியேர்ரேன். நீ என்ன சொல்றே?”

“நா சொல்றதுக்கு என்ன தலைவா, நீ சொல்லிப்புட்டே நா கிளம்பிட்டேன்.”

“நாகு, உன்னை மாதிரிப் பத்துபேர் இருந்தா நான் யாருன்னு காண்பிச்சுருவேன். நீ என்ன பண்ணறே கரெக்டா 6 மணிக்கு நம்ம வீட்டுக்கு வந்துரு. நாம டைரக்டா போயிடலாம்.”

“என்ன தலைவரே லாரி ஏதாச்சும் கிளம்புதான்னா. கேட்கட்டுமா?”

“வேணும்பா நம்ம டிரெயின் இருக்கவே இருக்கு லாரிலே போனா குளுரு ஜாஸ்தியா இருக்கும். லாரிலே, போறவங்க கூட நாம போனாக்கா அவன் சொல்ற இடத்திலே சத்தம் போட்டுக்கிணே இருக்கணும், ஆளுங்க இருப்பாங்க, அவங்க எல்லாம் கூலிக்கு மாரடிக்க வர்ரவங்க. எதோ டியூசனுக்குப் போயிட்டு வந்தியே நாகு. இப்போ பேப்பர் படிச்சு சொல்ல முடியுமா?”

“இப்போ நல்லாவே படிப்பேன் அண்ணே.”

பக்கத்து பையிலிருந்து ஒரு தமிழ்ப்பேப்பரை வாங்கி வந்தார்கள். என்ன எழுதியிருக்கார் பாரு.

“என்னடா போட்டிருக்கான்?”

“தலைவர் கடிதம் எழுதியிருக்கார் படிக்கிறேன்பா.

> தமிழா தூங்காதே உடன்பிறப்புளின் சோதனையான கட்டத்தில் உதவ ஓடி வா. உயிரையும் கொடுப்போம் என்று உரத்த குரல் கொடுக்க ஓடிவா. உன் எதிரிக்குப் பாடம் புகட்ட ஒன்று சேர்ந்து வா.”

“தலைவருன்னா தலைவர் தான். நான் அதுக்காகத் தொட்டு மெட்ராஸ் போகனும்னு சொன்னேன். நாம இங்கிருந்து கொண்டு என்ன செய்ய முடியும். சரி பேப்பர்க் கடையிலே பேப்பரைக் கொடுத்துட்டு வா. நா மத்த வேலையைப் போய் பார்க்கிறேன்.”

வீட்டுக்கு திரும்பும்போது மணி 3 ஐ தாண்டி விட்டது.

“ஏண்டா நீ என்னவோ மெட்றாஸ் போறதா முத்து சொல்றான். அங்கே போய் என்னடா பண்ணப் போறே? ரொம்ப கலாட்டா அது இதுன்னு சொல்றாங்களே” அம்மா கேட்டாள்.

“போம்மா. நம்ம ஆளுங்க கர்நாடகாவுலே கலங்கிக்கிட்டு இருக்கும்போது நாம சும்மா குந்திக்கிட்டு இருக்க முடியுமா. நான் இரண்டு நாளுலே வந்துடறேன்.”

“எக்கேடு கெட்டுப்போ. நா சொன்னா நீ எங்கே கேட்கப்போறே. ஏதோ பெத்தமனம் நீ மத்தவங்க மாதிரி நல்ல படியா வேலை, வீடு, வாசல்னு இருக்கணும்னு ஆசைப்பட்டேன்.”

“சரிம்மா. ரொம்ப சென்டிமெண்டா பேசாதே தலைவர்னா சாதாரணமா, இப்போ மந்திரியா இருக்கிறவங்க பாதிபேர் வீடு, வாசல்னு எதுவும் இல்லாமே இருந்தவங்க தான். கட்சி ஆட்சிக்கு வந்தா காரும் பங்களாவும் இல்லேன்னா ஜெயிலும், ஓட்டை சைக்கிளும் . அப்பா வந்தா சொல்லிடு,”

ஒரு சிறிய ஜோல்னா பையில் ஒரே ஒரு பழைய பாண்டு, துண்டு, இரண்டு பழைய சினிமா பாட்டு புத்தகங்கள் கிளம்பிவிட்டான்.

“அண்ணே, ஸ்டேஷன்லே கொண்டு விடவா!” என்று கேட்டான் முத்து.

“சரி, ரொம்ப தாங்ஸ்டா கண்ணா”

** ** ** *

“தலைவர் மெட்ராஸ் போறார், நானும் கூடப் போறேன்னு நாகு சொன்னான். நான் வராம இருப்பேனா? அதுதான் வந்துட்டேன்” என்றான் ஸ்டேஷனில் காத்துக்கொண்டிருந்த தேவா.

சௌரிக்குப் பெருமைப் பிடிபடவில்லை. தன்னைத் தலைவராக ஏற்றுக்கொண்டுத் தனக்கு மதிப்புக்குடுத்துத் தன கூட வரத் தயாராக இருக்கும் நண்பர்களைப் பார்த்து ரொம்ப தேங்க்ஸ்... கண்களில் உணர்ச்சி படர்ந்தது.

ஸ்டேஷன்லே நாகுவும் தேவாவும் வந்திருக்காங்க. நான் வரேன் தம்பி. தம்பிக்கு கையசைத்து விடைபெற்றான்.

வண்டி விழுப்புரம் வந்து சேர்ந்தது. இரண்டு டிக்கெட் பரிசோதகர்கள் வந்து "டிக்கெட் டிக்கெட்" என்று கேட்டார்கள்.

சௌரி முன்வந்து நின்றான்.

"டிக்கெட் எங்கே. டிக்கெட்" பரிசோதகர் மறுபடியும் கேட்டார்.

"இல்லே" அழுத்தந்திருத்தமா வந்தது பதில்.

"என்னடா டிக்கெட் வாங்கல்லே., பேச்சு மட்டும் வீராப்பா இருக்கு" டிக்கெட் பரிசோதகர் கோபப்பட்டார்

"கேக்க நாதி இல்லாமே. தமிழன் அங்கே கர்நாடகத்திலே கதி கலங்கி நிற்குறான். அதைக் கேட்க ஆளில்லே கேட்கப்போறவன்டே டிக்கெட்னு கேட்குறான். தமிழன்னா ரொம்ப கேவலமாய் போயிடுத்து. இதே டிக்கெட் சூளூர்பேட்டை தாண்டி கேட்டுப்பாரு பம்பாய் பக்கத்திலே போய் கேளு. பீஹார்லே கேளு. ரயில்லேயிலேயே ஒழுங்கா பயந்து டிக்கெட் வாங்கி போறவன் தமிழ் நாட்டிலேதான்னு சொல்றான். இங்கே ரிஸர்வேஷன் கம்பார்ட்மெண்டுன்னு சொன்னா வாயை மூடிட்டு அடுத்த கம்பார்ட்மெண்ட்லே போய் தொத்திக்கிறான். பாம்பேலே போய் நாங்க ரிஸ்ர்வ் பண்ணிக்கிட்டு வந்திருக்கோம். நிறைய பேர்கள் கூட்டமா வராங்கன்னுசொன்னா என்ன செய்றது கூட்டம் அதிகம் கொஞ்சம் அட் ஜஸ்ட் செய்யுங்க'ன்னு டிக்கட் செக்கரே பெரிய லெக்சர் அடிச்சான்."

“விடுங்க சார் பையன் கொஞ்சம் துடிப்பா இருக்கான்”. இது இன்னொரு டிக்கெட் பரிசோதகர். அவர் பேச்சில் கொஞ்சம் நக்கல் இருந்தது.

நாகு “சார் தலைவரை இப்படி சொல்லாதீங்க வேணா எங்களை ரயில்வே போலீஸ் கிட்டே ஒப்படையுங்க” என்றான்.

“இல்லே தம்பீ, நீங்க கர்நாடகத்துக்கு போய் தமிழங்களுக்கு உதவி செய்யணும்” சொல்லிவிட்டு அர்த்த புஷ்டியுடன் முதல் டிக்கெட் பரிசோதகர் பார்த்தார்.

“சார் கை கொடுங்க. தமிழனுக்கு தன்மான உணர்ச்சி வந்துடுச்சு. இனிமே தமிழனை எவனும் அசைக்க முடியாது.”

டிக்கெட் பரிசோதகர் போனவுடன் “தலைவரே நமக்கு எவ்வளவோ சப்போர்ட்டு பார்த்தியா” என்றான் நாகு

சென்னை வந்தது. சுவரெல்லாம் போஸ்டர்கள்

“கர்நாடகக்காரனின் திமிரை அடக்குவோம்.

தமிழன் என்ற இனம் உண்டு. தனியே அவருக்கு குணம் உண்டு
தமிழன் மேல் கை வைத்தால் தமிழ்நாடு பஞ்சாபாகும்.
காவிரித் தண்ணிர் இல்லையென்றால் கர்நாடகமும் இல்லையென்றாகும்.”

“நாகு பார்த்தியா மெட்ராஸ்ன்னா மெட்ராஸ் தான். நம்ம ஊரிலே சோமாரி எவனாவது இந்த மாதிரி போஸ்டர் ஒட்றானா? நம்ம பக்கத்திலே ஒண்ணு சினிமா பார்க்கறான் இல்லே தண்ணி அடிச்சுட்டு கவிழ்ந்து படுத்துடறான்”

“சரி, விலாசம் எங்கே இருக்கு பாரு.”

இப்போ மணி ஐந்தரைதான் ஆகுது நேரே பீச்சுக்கு போயிடுவோம். இங்கிருந்து நடந்து போனா ஒரு அவர்லே போயிடலாம் அண்ணா சமாதியைப்பார்த்துடுவோம். கொஞ்சம் ஜாலியா ரெஸ்டு எடுத்துட்டு தலைவரை வீட்லே போய் பார்க்கலாம்.

மூணுபேரும் காஸினோ தியேட்டர் வாலாஜா ரோடு வழியாக கடல்கரையை அடைந்தார்கள். அண்ணா எம். ஜி. ஆர் சமாதியை வணங்கினார்கள். காலையில் சூப் வியாபாரம் சுறுசுறுப்பாய் நடந்து கொண்டிருந்தது. அதையும் முடித்து கொண்டார்கள்.

“பாரு சௌரி. மெட்றாஸ்லே காலை 6 மணிக்கு சூடா சூப் கிடைக்கிறது. நம்ம நாயர் டீ கடையிலே 7 மணிக்குக் கேட்டாக்கூட “பால் இப்போ தான் வந்திருக்கு; காயணும்னு சொல்வாரு”

“டேய் தேவா, என்ன? தலைவர் வீட்டாண்டாட்ட போகலாமா?”

இதில் என்ன விஷயம் என்றால் இவங்களுக்கு தெரிந்த ஒரே தலைவரிடம் அவ்வளவு நெருக்கமோ பரிச்சயமோ கிடையாது. ஏதோ எலக் ஷன் டயத்திலே வந்து விட்டு சௌரி வீட்டிலே சாப்பிட்டுவிட்டு போனவர்தான். அவர் வந்து விட்டுப் போனபிறகு ஒருவாரம் வரை அப்பா சௌரியுடன் பேசாமலிருந்தார். ஏதாவது கேட்டால்” சம்பாரிக்கத் துப்பில்லை. தண்டச் செலவு செய்ய லாயக்கு” என்று எரிந்து விழுந்தார்.

கசங்கிய பேப்பரிலிருந்த விலாசத்தை எடுத்து அந்தப் பக்கம் வாக்கிங் போய் கொண்டிருந்த ஆங்கிலோ இந்தியரைப் பார்த்துக் கேட்டார்கள்.

அவர்கள் “நோ டோண்ட் நோ” என்று ஆங்கிலத்தில்ச் சொல்லிச் சென்றார்கள்.

“அதான்யா தமிழ்நாடு, தமிழே தெரியாதவங்க எவ்வளவு நிம்மதியா இருக்கான் பார்த்தியா. இந்த கர்நாடகத்திலே தமிழன் எவ்வளவு பேஜார்படுகிறான்” சௌரி அங்கலாய்த்துப் போனான்.

ஒரு மாதிரியாக விசாரித்து கொண்டு தலைவர் வீட்டை அடைந்தார்கள். வாசலில் இந்தி மட்டும் தெரிந்த கூர்க்கா இருந்தான்.

“கியா ஹை, சாப் சோதா ஹை” என்று விரட்டினான்.

“என்ன சௌரி தலைவர் வூட்லே ஹிந்திக்காரன்.”

“நேபாளி கூர்க்கா. கூர்க்கான்னா நேபாளிகாரந்தான் அவன் கிட்ட கத்தி இருக்கும். யாரும் டபாய்க்க முடியாது. நாம காலங்கார்த்தாலே வந்துட்டும்ல அந்த ஆள் நைட் டூட்டியா இருப்பான் கொஞ்ச நேரம் போன நம்மாளு வந்துடுவான்.” இது நாகு.

அவன் சொன்னது பலித்தது. அப்போ தலைவர் குழந்தைகள் வாசலில் நின்ற ஸ்கூல் வேனில் ஏறின. “டாடா” மம்மி, டாடா பாய் பாய் என்று வாசல்வரை வந்த அம்மாவிடமும், கூர்க்கா பாயிடமும் விடைபெற்றுக்கொண்டார்கள்.

ஹலோ, டிரைவர் அங்கிள் வெரி லேட். ஹலோ ரமேஷ் வாட் இஸ் திஸ் நியூ டிரஸ் அட்றாக்டிவ் அண்ட் நைஸ்.”

“மை ஆன்டி ஹாஸ் ப்ரம் துபாய் ஐ ஹேவ் துபாய் சாக்லெட் பார் ஆல் தூபாய்.”

“என்ன சௌரி இவங்களுக்கு எல்லாம் தமிழே தெரியாது போலிருக்கு. அப்பா அம்மாகிட்ட எல்லாம் எப்படி பேசுவாங்க.” தேவா ஆச்சரியத்துடன் தேவா கேட்டான்.

“டே போடா நாட்டுப்புறம். அவங்களெல்லாம் இங்கிலீஷ்தான் படிக்கிறாங்க அப்படிதான் பேசணும்பா நம்ம ஊரு ஸ்கூல் மாதிரியா.”

பக்கிரியைப் போன தடவை வந்து பார்த்தது நினைவுக்கு வந்தது. போன தடவை ஏதோ பேரணிக்கு ஊர்வலத்துக்கு வந்தபோது தலைவரைப் பார்த்த போதுப்" பக்கிரித் தொடர்பு கிடைத்தது.

"பக்கிரி நான் சௌரி."

"யாருனு சட்டுனு நினைப்புக்கு வரல்லேயே"

பக்கிரி தலையைச் சொறிந்தான்.

"மல்லியத்திலிருந்து போன தடவை வந்திருந்தேனே. உன் தங்கச்சி கூட மல்லியதிலிருக்கான்னு சொன்னியே"

"ஆமாம் இப்போ ஞாபகம் வருது. நான் கூட உங்க வீட்டிலிருந்து தலைவருக்கு நாஷ்டா வாங்கிக்குடுத்தேன்".

"கரெக்ட். சௌரி என் பேர். இவங்க நம்ப தோஸ்து தேவா நாகு"

சௌரியின் குரலில் தலைவரின் வீட்டு வேலைக்காரனைத் தெரிந்து கொண்ட பெருமை தெரிந்தது.

"ஐயா, வணக்கம்" இருவரும் வணக்கம் தெரிவித்தார்கள்.

"வணக்கம்" பதிலுக்கு" பக்கிரி வணக்கம் செலுத்தினான்.

"என்ன விஷயம் சௌரி." சகஜமாய் விசாரித்தான்" பக்கிரி.

"கர்நாடகத்திலே தமிழங்களை அடிக்கிறாங்களாம் அதுபத்தி தலைவர் என்ன செய்யப்போறார் என்று தெரிஞ்சுக்க வந்தோம்."

"அட இதுபத்தி தலைவர் பேப்பரிலே அறிக்கை விட்டு விட்டாரே நீ பார்க்கலயா?"

"நான் பார்க்கல்லே என்ன அறிக்கை".

“அடுத்த ஞாயிறன்று பேரணி சரியா 3.00 மணிக்கு கார்ப்பரேஷன்லேருந்து கிளம்புது. இன்னும் 10 நாள் இருக்கு.”

“இதுக்குள்ளே அவங்க கதி” கதறினான் சௌரி.

“நீ ஒண்ணும் விஷயம் புரியாத ஆளா இருக்கியே. இன்னும் 4 நாள்ளே தலைவரின் மச்சினிச்சிக்குக் கல்யாணம்.. ஏக பிஸி. இன்னொண்ணு வெள்ளிக்கிழமை மத்திய மந்திரி ஒருத்தர் வர்ரார்.. அவருக்கு இந்த மாதிரி பேரணியெல்லாம் புடிக்காது அவர் வந்து போனப்பறம் தான் பேரணி.”.

சௌரிக்கு சப்பென்று போய் விட்டது. அவன் முகத்தில் ஈயாடவில்லை.கூடவந்த தேவாவுக்கும், நாகுவுக்கும் கோபமே வந்தது.

“நம்ம மாதிரி ஏழைக்குத் தான் ஏழை கஷ்டம் புரியும். அங்கே அடிபடறவங்க எல்லாம் நம்ம மாதிரி கூலிக்காரங்க தான். இவங்க உதவர வரைக்கும் அவங்க உயிர் இருக்கணும்.” தேவா படபடத்தான்

“நம்ப தோஸ்து தேவா, நாகு” என்று பக்கிரியிடம் சொல்லிவிட்டு நகர ஆரம்பித்தான்.

“சௌரி எங்கே போறே?” ஆதுரத்துடன் பக்கிரி விசாரிச்சான்.

“எங்கேயோ போறேன்” விரக்தியாய் சொன்னான் சௌரி.

அவன் வெகுளித்தனத்தையும், தலைவர்கள் மேல் கொண்டிருந்த நம்பிக்கையையும் பார்த்துப் பரிதாபப்பட்டான் பக்கிரி. “மல்லியம் போறப்போ வந்துட்டுப்போப்பா”

•“நிச்சயம் வர்ரேன்” – விர்ரென்று கிளம்பிவிட்டான்.

“வர்ரேன் அண்ணே” ஒப்புக்குச் சொல்லி வந்தார்கள் நாகுவும் தேவாவும்.

“என்ன தலைவரே. அடுத்தது என்ன பண்ணலாம்?” –தெரு திரும்பும்போது மெல்லக் கேட்டான் தேவா.

தலைப்பு செய்திகள் கொட்டை எழுத்தில் அச்சடித்து தொங்க விடப்பட்டிருந்தன.

“என்ன நாகு போட்டிருக்கான்?”.

“யாரோ நடிகராம், அவரும் இன்னொரு தலைவரும் இன்னிக்கே கர்நாடகாவுக்கு லாரிலே ஆளுங்ககூட போறாங்களாம்.”

“டேய் அந்த பேப்பரை வாங்கிவா”.

“படிடா சும்மாவா வாங்கச் சொன்னேன்.?”

நடிகர் தன் ரசிகர்கள் கூட 1000 பேர் சேர்ந்து 20 லாரிளிலே கர்நாடகம் சொல்லத் திட்டம். ஒரு அரசியல் தலைவர் தலைமை தாங்குகிறார்.

சௌரி, “நாமும் போய் சேர்ந்துப்போம்” என்றான்

அவர்களின் அடுத்த இலக்கு சரியாகத் தெரிந்தது.

நடிகரின் தெருவே நிறைந்திருந்தது. தலைமை ரசிகர்மன்றத் தலைவர் கர்நாடகத்துக்குப் போக வேண்டும் என்றும், நமது பலத்தையும், சப்போர்ட்டையும், காண்பிக்க வேண்டும் என்றும் போவதற்குத் தயாராக இருப்பவர்கள் பெயர் கொடுக்க வேண்டும் என்று சொன்னார்.

அவர் பேச்சை மேலும் கேட்கவில்லை. நேராக பெயர் கொடுக்கும் இடத்தை நோக்கி சென்றார்கள்.

10, 15 பேர்கள் அடித்துப் புடித்து கொண்டிருந்தார்கள்.

ஐந்து நிமிடங்களில் கூட்டம் கரைந்துக் காலியாகி விட்டது.

சௌரி போய் நின்றான்.

“உன் பெயர் என்ன?”

“என் பெயர் சௌரி, இவங்க தேவா நாகு”

“எந்த ஊர்?”

“மல்லியம்”.

“அந்த ஊர்லே ரசிகர் மன்றமே கிடையாதே.”

யாரையோ “தலைவரே” என்று அழைக்க அவர் வந்தார்.

“இவங்க பேர் கொடுக்கிறாங்க ஆனா நம்ம ரசிகர் மன்றத்தினர் இல்லே என்ன பண்ணறது?” என்று விளக்கினார் தலைவரின் உதவியாள்

“நீங்க யாரெப்பா?”

“நாங்க மல்லியத்திலே இருந்து வாரம். கர்நாடக மக்களுக்கு ஏதாவது பண்ணணும்”.

“சரி உங்களை மல்லியம் கிராமத்திற்கு ரசிகர் மன்ற தலைவராகப் போட்டுறோம்”.

“தலைமை மன்றத்துக்கு சந்தாரூ 10 கொடுங்க.” தலைவரின் உதவியாள் சொன்னார்.

“எங்ககிட்டே இல்லே”.

“இல்லேன்னா எப்படிப்பா?” இது டேபிளில் இருந்தவர்

“பரவா இல்லை. லாரிக்கு ஆள் குறைச்சலாயிருக்கு வரவங்களை விட வேண்டாம்.” தலைவரே என்று அழைக்கப்பட்டவர் ரகசியக்குரலில் சொன்னது சௌரி காதில் விழுந்திருக்க சாத்தியமில்லை.

சௌரி அங்குள்ள கூட்டத்தையும் பெரியபெரிய பேனர்களையும், ஆளுயர “கட் அவுட்” களையும் பார்த்து மலைத்து நின்றான். அவன் தோழர்கள் அவனைப்பார்த்து நின்றார்கள்.

“தம்பீ..” தலைவர் என்று அழைக்கப்பட்டவர் தோளைத் தொட்டுத் திருப்பினார். “நீயும் உனது நண்பர்களும் லாரியில் எங்க கூட வர்ரீங்க. அங்கே போய் இரண்டு மூணு பார்ம் பூர்த்தி செய்யுங்க.”

“இல்லீங்க அதெல்லாம் வராது எங்களுக்கு அவ்வளவு படிப்பு இல்லீங்க”.

“கவலைப்படாதே தம்பீ இங்கேயும் எல்லோரும் படிச்சவங்க இல்லை”

“டேய் சிங்காரம் தம்பிகளை கூட்டி போய் டிபன் காபி கொடுத்து எல்லாம் ‘ஃபில் அப்’ பண்ணி வை”

சௌரிக்கும் நண்பர்களுக்கும் தலைகால் புரியவில்லை. உள்ளே போனதும் 4 இட்லி, 2 போண்டா, டீ கொடுத்தார்கள். ஒரு வட்டவடிவமான துணியில் இரண்டு மூன்று பூக்கள் வடிவத்தில் கலர்துணிகளும், வால் மாதிரி ஒரு சிவப்பு கலர் துணியும் நடுவில் நடிகர் தலைமை ரசிகர் மன்றம் சென்னை என்றும் பொரித்த பேட்ஜ் ஒன்று சட்டையில் குத்தி விட்டார்கள்.

“தம்பீ, நீ தலைவர், உனது நண்பர் செயலாளர், இன்னொருவர் பொருளாளர். ஒரு பேப்பரை கொடுத்தார்கள். இதை ஊரில் போய் நிதானமாய் படித்து பார்த்தால் நன்றாக விளங்கும்” என்றார். தலைவர்

“3 மணிக்கு தான் நாம கிளம்ப போறோம் இப்போ மணி 12 தான் ஆறது. நீங்க எங்கேயாவது போய் 2 மணிக்கு வர்ரீங்களா இல்லைன்னா இங்கேயே மாடியில் போய் படுக்கிறீங்களா?” - தலைவரின் உதவியாள்

“மாடியில் போய் படுக்கிறோம்”

“அப்படியே செய்யுங்க.”

லாரிகள் வந்து சேரும்போது 4. 30 மணி ஆகிவிட்டது.

“லாரிக்கு வர்ரவங்க உள்ளே வாங்க”. ஸ்பிக்கரில் அறிவித்தார்கள்.

முதலில் முண்டி அடித்து கொண்டு சௌரி, தேனா நாகு போய் நின்றார்கள். தலைவர் என்று அழைக்கப்பட்டவர் பக்கத்திலுள்ளவரைப் பார்த்து “பையன் துடிப்பா இருக்கான். நகர ரசிகர் மன்றத்துக்கு தலைவராக்கிடலாம். கொஞ்சம் நௌிவு சுளிவுகளை கத்து கொடுத்தால் போதும்.”

“வெரிகுட் தம்பீ நீ முன்னுக்கு வரவேண்டிய்வன் தான்” என்று தலைவர் சௌரியைத் தட்டி கொடுத்தார்.

முதல் லாரிக்கு ஓரளவு கூட்டம் இருந்தது பின்பு ஆள் பிடித்து ஏற்பாடு செய்யவேண்டியிருந்தது. லாரி வந்த போது லாரியில் தொண்டர்கள் எண்ணிக்கையை குறைக்க வேண்டியிருந்தது. 2 லாரிகளை விட்டுவிட்டு மற்ற லாரிகளை திருப்பிவிட முடிவு எடுக்கப்பட்டது.

நடிகர் முன்னால் காரில் ஏறிக்கொண்டார். காருக்கு முன்னால் இரண்டு ஜீப்பும் பின்னால் இரண்டு கார்களும் கலந்து கொண்டன. தலைவர் என்று அழைக்கப்பட்டவர், கலந்து கொண்ட முன்னணி

அரசியல் தலைவரோடு பின்னால் சென்ற காரில் அமர்ந்து கொண்டார்.

“தலைவருக்கு ஜே, தலைவர் வாழ்க, கர்நாடகர்கள் ஒழிக” கோஷத்துடன் கிளம்பியது.

சென்னையிலிருந்து கிளம்பும்போது 6 மணி ஆகிவிட்டது. திருவண்ணாமலையில் இரவு தங்கி காலையில் கிளம்ப புரோக்ராம் தயாராகியது. ஒரு தியேட்டர் வாசலில் நின்றது. அந்த தியேட்டர் அந்த நடிகருக்குச் சொந்தம் என்று யாரோ சௌரிக்கு பின்பு சொன்னார்கள்.

படம் காண்பித்தார்கள், சாப்பாடு போட்டார்கள். பின்பு பயணம் காலை 7 மணிக்கு தொடங்கியது. பாதி பேருக்கு த் தூக்கக் கலக்கம். ஜில்லென்று அடித்த குளிர் காற்றும் குளிரான சூழ் புறமும் எல்லோருக்கும் இதமாக இருந்தது.

கர்நாடக எல்லையை அடைய இன்னும் 50 KM மட்டும் இருந்தன. இன்னும் சுவரில் “தலைவர் வாழ்க, தமிழர் வாழ்க, தமிழ் வாழ்க. சுவரொட்டிகள் தெரிந்தன.

“கர்நாடகர் ஒழிக” என்ற கோஷம் திடீரென கேட்கவும் “என்ன விஷயம்” செருமிக்கொண்டே சௌரி நாகுவை கேட்டான்.

சௌரிக்கு எவ்வளவு பலமாக கத்துகிறமோ, அவ்வளவு கர்நாடகத் தமிழருக்கு ஆதரவு என்று மனதில் இருப்பதாக பக்கத்திலுள்ள எல்லோருக்கும் புரிந்தது.

ஒவ்வொரு சமயம் நாகு கூட கவனமாக தன் காதுகளை சௌரியிடமிருந்து காப்பாற்றிக்கொள்ள வேண்டியிருந்தது. அவர் குரல் ரொம்ப கம்மிப்போய் விட்டுருக்குது.

“ஆனாலும் அண்ணே, ரொம்ப கஷ்டப்படுவீங்க. குரல் வர ஒரு வாரம் ஆகும் போல இருக்கே” நாகு உண்மையான கவலையுடன் கேட்டான்.

“நம்ம உடலைப்பார்த்தா இதுக்கு வந்தோம் அவங்க கஷ்டம் எவ்வளவு தெரியுமா?” தத்துவம் பேசினான் சௌரி, சரி நான் கேட்டது என்ன விஷயம்.

“தெரியல்லை அண்ணே”

பக்கத்திலிருந்தவன் “கர்நாடக எல்லைக்கு இன்னும் கொஞ்ச தூரம் தான். ஒசூர் தான் இரண்டுக்கும் உள்ள பார்டர் நாம் ஒசூரில் இருக்கோம் இன்னும் கால் மணிலே கர்நாடக எல்லைக்குள் போயிருவோம்.”

ஒசூரில் ஒரு ஹோட்டலுக்கு முன்னால் லாரிகள் நின்றன. ஊர் ஜனங்கள் லாரிகளைப்பார்த்து ஓடி வந்தனர். எல்லோருக்கும் டீ, டிபன் தரப்பட்டது. யார், யாரோ நாகு, சௌரி தேவாவுக்கு கை கொடுத்தார்கள்.

9.30 மணி சுமாருக்கு லாரியில் ஏறினார்கள். திடீரென ஐந்து ஜீப்புகள் வந்து லாரிகளுக்கு முன்னால் நின்றன. தொடர்ந்து ஒரு காரில் கலெக்டர் வந்தார்.

நடிகரும், தலைவரும் காரிலிருந்து இறங்கிப்போய் கலெக்டரும், ஏதோதோ பேசினார்கள். சிரிப்பொலிகளும் கை குலுக்கல்களும் தொடர்ந்தன. ஹோட்டலிலிருந்து கூல்டிரிங்குகள் வந்தவர்கள் எல்லோருக்கும் கொடுக்கப்பட்டது.

கலெக்டர் காரில் ஏறிப்போய் விட்டார். ஜீப்பில் வந்த போலீஸ் அதிகார்கள் 10 போலீஸாருடன் நின்றார்கள்

போலீஸிடமிருந்து மெகாபோன் நடிகரிடம் கொடுக்கப்பட்டது. அவர் பேச ஆரம்பித்தார்.

“தொண்டர்கள் ரசிகப்பெருமக்களே நமது உணர்ச்சிகளைப் புரிந்து கொண்ட தமிழக அரசு உரிய நடவடிக்கை எடுப்பதாகவும், மற்றும் கர்நாடக அரசுக்கு நம் உணர்ச்சிகளைத் தெரியப் படுத்துவதாகவும் தெரிவிக்கிறது. கலெக்டர் அதைத் தெரிவித்துவிட்டு போனார். நம்மை இந்த பயணத்தை கை விடும்படி கேட்டு கொண்டார். ஆனாலும் நாம் பயணத்தைக் கை விட மறுத்து விட்டோம். “

கரகோஷம், ஆரவார ஒலிகளும் அந்த ஊரின் நிசப்தத்தையும், குளிரையும் கிழித்தன..

சௌரிக்கு உண்மையிலேயே தான் வந்த பயணம் அர்த்தமுள்ளதாகத் தோன்றியது.

நடிகர் மேலும் தொடர்ந்து “கலெக்டர் அவர்கள் தீர்மானமாக அப்படி பயணம் செய்தால் கைதுச் செய்யச் சொல்லி தமிழக சி. எம் உத்தரவு கொடுத்திருப்பதாகச் சொன்னார்.

“நம் முயற்சியில் உள்ள உந்துதலால் நான் என்னைக் கைது செய்யச் சொல்லிவிட்டேன். டோக்கனாக சில தொண்டர்களையும் கைது செய்வதாக சொல்கிறார். கைதாக விருப்பமுள்ளவர்கள் இங்கு நிற்கிற வேனிலே ஏறிக்கொள்ளலாம். இரண்டு லாரிகள் திரும்ப சென்னை போய்விடும்”. சொன்னார்.

முதலில் தலைவர் என்று அழைக்கப்பட்டவர் மாலையை நடிகருக்கு போட்டார். ஏழை பங்காளன் – தமிழருக்கு தலைவன். தமிழகத்தின் தலை சிறந்த நடிகன் – கலையுலகில் ஒரு வள்ளல் – வாழ்க கோஷங்கள் நிறைந்திருந்தன.

இரண்டு லாரிகளிலிருந்து 10 பேர்கள் ஒரு வேனில் ஏறினார்கள் அதில் சௌரி, தேவா, நாகு இருந்தார்கள்..

தலைவர் என்று அழைக்கப்பட்டவர் "யாரிடமோ பேசி தோள் மீது பாசத்துடன் கை வைத்து வேனை நிரப்ப பெரு முயற்சி செய்தார். ஒரளவு நிரம்பியதும் டி எஸ் பி அவரைப் பார்த்து நாங்க கிளப்புகிறேன் என்று நாங்கள் இருந்த வேனைத் தனியாக நிற்க வைத்தார். இரு போலீஸ்காரர்கள் வேனுக்குள் வந்து பெயர் விலாசம் வாங்கி எழுதிக்கொண்டிருந்தார்கள்.

தலைவர் என்று அழைக்கப்பட்டவரை மற்ற இரண்டு லாரியில் வந்தவர்கள் சூழ்ந்து கொண்டார்கள். ஒரே கூச்சலும், குழப்பமும் நிலவியது சௌரி லாரியிலிருந்து போய் என்ன நடக்கிறது என்று பார்க்க ஆவல் கொண்டான். அவன் இறங்க முயற்சிக்கையில் ஒரு போலீஸ்"

"இறங்ககூடாது நீங்களெல்லாம் இப்போது கைதாகி இருக்கிறீர்கள்" என்று செல்லமாக அதட்டினர். தொண்டர்கள் ஏறினர். "கர்நாடகத்தில் வசிக்கும்  தமிழருக்காக உயிரை பயணம் வைத்து போராடவந்த நடிகரையும், தொண்டர்களையும் கைது செய்யதைக் கண்டிக்கிறோம். அவர்களை விடுதலை செய்யவும்." என்று நடிகரின் அகில உலக தலைமைக் கழகம் பெயரில் தயாராக இருந்த போஸ்டர்கள் வேனின் இருபக்கங்களிலும் ஒட்டப்பட்டன.

வேனிலிருந்த ஒருவர் சௌரியிடம் "போராட்டம்தான் என் பிழைப்பு, ஒரு தடவை ஜெயில் வரைக்கும் போயிருக்கேன் போனா 500, 600 தேறும், ஒண்ணு செய்யேன். ஒங்க மூணு பேரையும் என் பார்ட்டின்னு சொல்லிக்கிறேன். உனக்கும் கொஞ்சம் கூட பைசா வாங்கித் தர்ரேன்" என்றார்.

சௌரிக்கு ரத்தம் கொதித்தது.

“நான் ஒண்ணும் கூலிக்காக வரவில்லை. ஆபத்துலே கஷ்டப்படற நம்ம ஆளுக்கு உதவ ஒடிவந்தேன். நீ இங்கே பேசிட்டே எங்க மல்லியத்திலே பேசி இருந்தே நடக்கறதே வேறே– பேச முடியாமல் பேசினான்” சௌரி

அவனும் உஷாராகிவிட்டு “சே... தேறாத கேஸ். நம்ம நாட்டிலே படிப்பறிவு இல்லேங்கறது சரியாத்தான் இருக்கு” என்று வாய்க்குள் சொன்னது சௌரிக்கு தெரிய ஞாயமில்லை.

அரை அவர் ஆச்சு. ஒண்ணும் நடந்ததா தெரியவில்லை. லேசான வெப்பம் முதலில் இதமாய் இருந்தாலும் சூடு வாட்ட ஆரம்பித்து விட்டது.

“என்ன அண்ணே இங்கே இறக்கிவிட்டுடுவாங்கன்னே. இன்னும் ஒண்ணும் நடக்கல்லை.” நாகு மெதுவாக போராட்டத்தினரிடம் கேட்டான்.

அவனுக்கு இவங்க கூட்டத்தில் பேச இஷ்டமில்லை தான். பேசவோ இல்லை தெரிந்ததாகக் காட்டிக்கொள்ளவோ விருப்பம் இல்லை என்று காதில் விழாதவன் போல இருந்தான்.

“என்ன நாகு, அவரைப் போய் கேட்கற நம்மை மாதிரிதான் அவரும் அவர் என்ன கலெக்டரா? கரெக்டா சொல்ல”– தேவா நாகு வைக் கடிந்தான்.

இந்த அவமதிப்பு அனுபவசாலியை உசுப்பிவிட்ட. து.

“யோவ் உன்னைமாதிரி நாட்டுப்புறம் இல்லை. எனக்கு எல்லாம் தெரியும். நடிகரை வைக்கிறத்துக்கு “ஸ்பெஷல் கிளாஸ்” ஜெயில் இந்த சின்ன ஊரிலே இருக்காது. கலெக்டர்கிட்ட பேசிக்கிணு இருப்பாரு. தலைவரை தனியா வைச்சுடலாமா? இல்லை ஹோட்டலிலே வைச்சுடலாமா?, இல்லாட்டா தலைவரை மட்டும்

அடுத்த ஊருக்கு கொண்டு விடலாமான்னு கன்சல்ட் பண்ணிக் கிட்டு இருப்பாரு”

“ஜெயில்லே பஸ்ட் கிளாஸ், செகண்ட் கிளாஸ்னு ரயில் மாதிரி இருக்குமா?” தன் அறியாமையை காட்டினான் தேவா .

அவன் அறியாமை அனுபவசாலியின் கோபத்தை ஒரங்கட்டியது. அவரைக் கேட்ட ஆர்வமாயிருந்த தேவா, நாகுவின் விழிகள் அவனை உணர்ச்சி வசப்பட வைத்தன. சௌளிக்கும் திருட்டுதனமாக அவன் அனுபவ விளக்கங்களை கேட்கும் ஆர்வம் பிற ந்தது..

“நம்ம மாதிரி ஆளுங்களுக்கு தான் ஜெயில். தலைவர்களுக்கு எல்லாம் ஜெயில் ஜெயில் இல்லே. அவங்களுக்கு தான் உண்மையிலேயே மாமியார் வீடு என்ன வேணும் பேப்பர், டி.வி, காப்பி, கூல்ட்ரின்ங்க்ஸ், படுக்கை, சமயத்திலே ஏஸி, ஏன் பொண்டாட்டி வேணும்னாலும் கூட கேட்டு வாங்கிக்கலாம்.” என விளக்கினார் அனுபவசாலி

“அம்மாடி, தலைவர் 5 தடவை ஜெயிலுக்கு போயிருக்கார். அப்படியெல்லாம் மீட்டிங்கிலே சொல்றாங்களே” . தேவா

“அதாம்பா நம்ம மாதிரி நம்பறவங்க இருக்குற வரைக்கும் அவனவன் தம்பட்டம் அடிச்சுப்பான் துட்டு விஷயம்தான்.” அனுபவசாலி

அனுபவசாலியின் ஊகம் சரியாகப் போய் விட்டது. மேலும், அடுத்த அரை மணியில் வேன் பயணம் தொடங்கி ஒரு பெரிய ஊரை அடைந்தது. இவங்க வேன் போவதற்குள் அந்த ஊரில் “இவர்களை விடுதலை செய்ய சொல்லும் போஸ்டர்கள் முளைத்திருந்தன. அந்த

ஊரில் ஒரு பெரிய காம்பவுண்டுக்கு முன்னால் நிற்கும் போது மணி 12 ஆகி விட்டது.

சௌரிக்குப் பசி வயிற்றை கிள்ளியது. அனுபவசாலியிடம் கேட்கலாமா என்று நினைத்தான் அவன் சுய கௌரவம் அவனை தடுத்தது.

அந்த வழியாகப் போய் கொண்டிருந்த போலீஸை அனுபவசாலி அழைத்து

“என்ன அண்ணே சாப்பாடு ஏற்பாடு ஆயிட்டுதா?” என்று சகஜமாகக் கேட்டான்.

“திடீரென்னு வந்தா எப்படி ஏற்பாடாகும்? ஜெயிலுக்கு வந்தா அவன் போய் எழுதி சாங்ஷன் ஆகி சாப்பாடு வர இரண்டு நாளாகும். “தலைவர் ஏதோ ஏற்பாடு செய்யறதா கேள்வி.”

“சரி அண்ணே எனக்கு ஒரு பண்ணும், ஒரு பீடி கட்டும் வாங்கிக் கொடேன்.” இது அனுபவசாலி

முழு இருண்டு ரூபாய்தாள் கை மாறியது.

“அண்ணே எங்களுக்கு 2 பன் 4 கட்டு”

தேவா 4 ரூபாய் கொடுத்தான்.

ஒரு பெரிய காம்பவுண்டுக்குள் வேனைக் கொண்டு விட்டார்கள். இரவு 7 மணிக்கு பண்ணு, டீ, வாழைப்பழம் தலைவர் அனுப்பியதாகச் சொன்னார்கள்.

காலை 6 மணிக்கெல்லாம் “மைக்கிலே சொல்ல ஆரம்பித்து விட்டார்கள். வேனிலே வந்தவங்க எல்லாம் வேனிலே ஏறிக்கோ. விடுதலை ஆயிடுச்சு” சௌரி, நாகா தேவா வேனிலே போய் அமர்ந்து கொண்டார்கள்.

**எஸ். வெங்கட்ராமன்**

“ஏன் அண்ணே நம்ம தலைவர் கார் காணாம் அவங்களை விடுதலை பண்ணலையா.” தேவா அனுபவசாலியிடம் கேட்டான்

அனுபவசாலி சிரிச்சு கொண்டான். “தம்பீ அவங்க காலையிலே 4 மணிக்கே கிளம்பி இத்தனை நேரம் பொண்டாட்டி கூட பேசிக்கிட்டு இருப்பார்”

வேன் கிளம்பி சென்னையை அடைய மணி 10 ஆகிவிட்டது. நேரா ரசிகர் மன்றத்து போய் நின்றது.

நடிகர் குளித்து, புத்தாடை உடுத்த மகிழ்ச்சி பொங்க இருகரம் கூப்பி வரவேற்றார். ஆளுக்கு இரண்டு பிஸ்கட், டீ கொடுக்கப்பட்டது.

தலைவர் என்று அழைக்கப்பட்டவர் ஒவ்வொருவர் அருகிலும் வந்து விசாரித்து அன்புடன் தோளை தொட்டு பேசி வந்தார். தேவா, நாகா சௌரியிடமும் வந்து பேசி ஆளுக்கு கையில் ரூ 100 வைத்தார்.

தேவாவுக்கும், நாகாவுக்கும் ஆச்சரியமாய் இருந்தது. சௌரிக்கு அவமானமாய் இருந்தது.

“பக்கிரியைப் பார்த்துட்டு நைட் வண்டிலே ஊருக்கு போலாம்” சுரத்தில்லாமல் பேசினான் சௌரி.

தலைவர் வீட்டுக்கு போற வழியில் ஒரு குடும்பம் இரண்டு குழந்தைகளுடன் பெட்டி படுக்கையுடன் வந்து கொண்டிருந்தது.

சௌரி அவர்களைப் போய் விசாரித்தான். அவர்கள் கோலார் என்றும், உயிருக்கு பயந்து ஓடி வந்ததாகவும் அவர் மனைவியின் அண்ணன் வீட்டுக்கு போவதற்கே சங்கடப்பட்டு போவதாகவும் புலம்பி தீர்த்தனர்.

சௌரிக்கு திடீரென ஒரு மின்னல் வேக ஐடியா வந்தது.

“சரி, ஐயா நீங்கள் என்கூட வாருங்கள் நான் முடிந்த உதவி செய்கிறேன்.”

நேரே தலைவர் வீட்டுக்கு போய் பக்கிரியைப் பார்த்தான். பக்கிரியிடம் தலைவரைப் பார்க்க வேணும் கர்நாடகத்திலிருந்து வந்த தமிழரையும் காட்டினான்.

பக்கிரிக்கு கொஞ்சம் சங்கடமாயிருந்தது. “கொஞ்சம் இரு சௌரி ஐயாவைப் பார்த்துட்டு வர்ரேன்.”

கர்நாடகத்திலிருந்து ஆளுங்க வந்திருக்காங்க. சொன்னவுடன் தலைவர் சந்தோஷப்பட்டார். உடனே வரச் சொன்னார்.

பக்கிரி அழைத்து செல்ல தேவா, நாகா, சௌரி டன் கர்நாடகக் குடும்பம் சென்றது.

“வணக்கம்” எல்லோரும் வணக்கம் செலுத்தினார்கள்.

பக்கிரி ஒரமாய் நின்றான்.

“நாங்க ரொம்ப கஷ்டப்படறோம். கர்நாடகத்திலிருந்து லாரி, வேன் பிடிச்சு ஒடி வந்துட்டோம்” கர்நாடகம் புலம்பியது.

இவங்களெல்லாம் என்று பக்கிரி பக்கம் பார்த்தார்.

“இவங்க மூணு பேரும் நம்ம ஆளுங்கதான் நம்ம மல்லியம் போயிருந்தபோது அவங்க வீட்டுக்கு போயிருக்கோம்.

“அது சரி நீங்க தனித்தனியா வந்தா என்ன செய்ய முடியும் கும்பலா கூட்டமா வந்தா ஏதாவது செய்யலாம். நமக்கும் பேர் வந்த மாதிரி இருக்கும் தனி ஆளுக்கோ, குடும்பத்துக்கோ என்ன பண்ணறது? என்ன பயன்?” தலைவர் வெளிப்படையா பேசிட்டு உங்க விலாசம் கொடுங்க. இங்க காம்ப் ஏற்பாடு பண்ணினா அதிலே சேர்த்து விடறேன்.”

தலைவர் அப்படி சொல்லிவிட்டு வேறு ஏதும் பேச விரும்பவில்லைன்னு தெரியும்படி உள்ளே சென்றார்.

“வாங்க பெரியவரே” சௌரி அழைத்து வெளியே வந்தான் பக்கிரிகிட்ட கூட பேசவில்லை. தனக்குக் கொடுத்த 100 ரூ நோட்டை அவரிடம் கொடுத்து “இப்போது என்னால் முடிந்தது. அவ்வளவுதான்” அவன் குரலில் ஏக்கம், வருத்தம், அனுதாபம் நிறைந்திருந்தது..

# தேர்தலுக்கான வேட்பாளர் நேர்காணல் :

இப்போது தேர்தலுக்கான நேர்காணல் முடிந்து விட்டது. இது கொஞ்ச முன்னாள் வந்திருந்தால் எத்தனையோ பேருக்கு உதவியாக இருந்திருக்கும். பரவாயில்லை தேர்தல்கள் நிறைய வருகிறது. ஜனநாயக நாட்டில் தேர்தல் பெரிய பிசினஸ்.

இந்த கையேடு எப்போதும் உபயோகமாக இருக்கும்.

கேள்வி : ங்கள் தேர்தலுக்கு நிற்க தயாராகி இருக்கிறீர்கள் அதற்கான நேர்காணலுக்கு வந்து இருக்கிறீர்கள்.

பதில் : ஆமாம் ஐயா

கே :நீங்கள் எவ்வளுவு சிலவு செய்வீர்கள்.?

ப : என் சொத்து எல்லாமே உங்களால் சேர்ந்தது. எல்லாத்தையும் செலவு செய்வேன்.

கே : இப்படி எல்லாம் சொல்லக்கூடாது எவ்வளவு என்று ஒரு நம்பர் சொல்லவேண்டும்?.

ப : நீங்க எவ்வளவு சொல்லுறீங்களோ அவ்வளவு சிலவு செய்வேன். சீட் வேண்டும்.

கே : என்னப்பா. சரி. இப்படி சொன்ன எப்படி?கட்சிக்கு 2சி தேர்தலுக்கு 2 சி முடியுமா?

ப : சரி ஐயா.

கே :நீங்க ஜெயிச்ச என்ன செய்வீங்க?

ப : தலைவருக்கு விஸ்வாசமாக இருப்பேன்.

கே :தொகுதிக்கு என்ன செய்வீங்க?

**எஸ். வெங்கட்ராமன்**

ப : தலைவர் சொல்லற வேலை எல்லாம் செய்வேன்.

கே :மக்களுக்கு என்ன செய்வீங்க?

ப : தலைவர் சொல்லற வேலை எல்லாம் செய்வேன்

கே :மக்கள் கிட்டே என்ன சொல்லி வோட்டு கேட்பீங்க?

ப :தலைவர் என்னை இங்கே நிக்கச்சொல்லி இருக்கிறார். நான் உங்களுக்காக தலைவர் சொல்றாபடி பணி செய்வேன். உங்கள் வோட்டு எனக்கே . சரியா?

கே :மக்களிடம் நீங்கள் செய்த செயல்கள் சொல்லி ஒட்டுகேட்கமாட்டிங்களா?

ப : ஐயா காமெடி பண்ணாதீங்க. தயவு செய்து மைக்கை ஆப் செய்யுங்கள். நான் என்ன செய்தேன் எல்லா கடைகளிலும் மாமூல் வசூல் செய்தேன். சில புறம்போக்கு நிலங்களை ஆட்டைபோட்டேன் கட்டபஞ்சாயத்து பண்ணினேன். அப்பப்போ கட்சி பேரை சொல்லி பணம் வசூல்பண்ணினேன் இதை எல்லாம் சொல்லி ஒட்டு எவனாவது கேப்பானா?

கே : அப்போ எந்த தைரியத்தில் சீட் கேக்குறீங்க?

ப : நிக்கிறவங்க எல்லோரும் இப்படித்தானே? யாருக்காவது ஒட்டு போட்டு தானே ஆகணும். கடைசி சமயத்தில் கொஞ்சம் காசு கொடுத்து பேரணி அது இது பண்ணி ஜெயிக்கிற கட்சின்னு காண்பிச்சா வோட்டு தானா விழுந்துடும்

கே : எதாவது காரணத்தினால் கட்சி உடைந்து போனால் நீங்கள் யார் பக்கம் நிற்ப்பீங்க?

ப : மன்னிக்கவும். இது கேள்வியே இல்லை.. தலைவர் இருக்கிற வரைக்கும் அவர் தான் தலைவர். அவருக்கு அடுத்து அவர் யாரை கைகாட்டுகிறோரோ அவர் தான் தலைவர்.

கே :கடைசியாக என்ன சொல்ல விரும்புகிறீங்க?

ப : நான் அதிகம் படிக்காதவன். நம்ம அறிவுக்கும் தகுதிக்கும் இதெல்லாம் ரொம்ப ரொம்ப அதிகம். தலைவர் என் மேல் கருணை கொண்டு என்னை எம்.எல்.ஏ ஆக்கி அழகு பார்க்கிறார்.. அவர் வீ ட்டு நாயாக உழைப்பேன்.

ஐயா எனக்கு சீட். உண்டா?

கேள்வி கேட்பவர் : உன்னை விட தகுதியானவர் பொருத்தமானவர் யார் இருக்கப்போகிறார்கள்? உனக்கு சீட் உறுதி. நீங்க போகலாம்

புத்தகத்தின் மேல் பக்க உள் அட்டை

தேடிச் சோறுநிதம் தின்று - பல
சின்னஞ்சிறு கதைகள் பேசி - மனம்
வாடித் துன்பமிக உழன்று - பிறர்
வாட பலசெயல்கள் செய்து - நரை
கூடி கிழப்பருவ மெய்தி - கொடும்
கூற்றுக் கிரையெனப்பின் மாயும் - பல
வேடிக்கை மனிதரை போலே - நான்
வீழ்வேனென்று நினைத் தாயோ?

**அரசியலா..?**

புத்தகத்தின் பின் பக்க மேல் அட்டை



அதிகாரம் ரௌடிகள் கொள்ளைக்காரர்கள் வழிப்பறி செய்பவர். கையில் சேரும். தலைவர்கள் நேர்மை இல்லாதவர்களாகவும் தரம் குறைந்தவர்களாகவும் நம்பிக்கை வைக்க முடியாதவர்களாகவும் இருப்பார்கள் தலைவர்கள் தேன் தடவிய நாக்கு உள்ளவர்களாகவும் அற்ப மனது உடையவர்களாகவும் இருப்பார்கள். அவர்கள் பதவிக்காக அவர்களுக்குள் சண்டை போட்டுக் கொள்வார்கள் அவர்கள் சண்டையினால் இந்தியா வலுவிழக்கும்”

இந்த மேற்கோள் வின்ஸ்டன் சர்ச்சில் இந்தியா சுதந்திரம் வாங்கும்போது சொன்னது.

இதில் நமக்கு பொறுப்பு உண்டு தெரியுமா?குற்றத்தை வாய்மூடி பார்த்திருப்பதும் குற்றத்திற்கு துணை போவதாகக் கருதப்படும். அதுவும் சட்டப்படி குற்றமே.

**எஸ். வெங்கட்ராமன்**